றுள்ளமீனுயிருண்ணினெக்காலமுந்
தள்ளொணாதபழிவந்துசாருமே. (௨௦)

என்றுமிதநடமினிலவாகநீ
நன்றுசாலவரநல்கெனவெள்ளிமா
மன்றுளாளுடைவரந்தந்துபோயினன்
சென்றுநாரைசிவலோகஞ்சேர்ந்ததால். (௨௧)

இயங்குபோநதுமியம்பவிமானமேற்
புயங்கருருவமுங்கண்களும்பொற்பவான்
வியங்கொள்பூமழைவெள்ளத்துளாழ்ந்துபோய்
வயங்கொணாதிகணத்துளவிர்ந்ததே. (௨௨)

அன்றுதொட்டின்றளவும்பொற்றாமரை
யென்றுரைக்குமெழின்மலரோடையிற்
சென்றுறைந்துந்திரிகின்றமீனெலா
மொன்றுமற்றனநீர்வாழுயிர்களும். (௨௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தன்கிளையன்றிவேற்றுப்பறவைகடாமுந்தன்போ
னந்தியடையவேண்டிற்றேகொலிந்நாரைசெய்த
வன்பினில்வியப்போவீசனருளினில்வியப்போவன்பர்க்
கின்புருவானவீசனன்பருக்கெளிதேயைய. (௨௪)

கலிவிருத்தம்.

மறக்குறும்புகளோகட்டுமண்ணின்மே
லறப்பெரும்பயிராகியதன்பயன்
சிறக்கநல்கிடவுண்டுசெருக்குவான்
றுறக்கமெய்தியிருந்தான்சுகுணனும். (௨௫)

நாற்பத்தெட்டாவது

நாரைக்குமுத்திகொடுத்தபடலம் - முற்றிற்று.

ஆக படலம் - ௪௮ - க்கு திருவிருத்தம் - ௨௩௨௧.

---

(௨௨) வியம்-பெருமை. வயம் - வெற்றி. (௨௫) மறக்குறும் பென்றது - பாவங்களை.

உ

சிவமயம்.

நாற்பத்தொன்பதாவது

# திருவாலவாய்க்காண்டம்.

## திருவாலவாயானபடலம்.

### சோமசுந்தரக்கடவுள் வணக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாயுடையாரவிடுத்தபழியழல்வழுதியுடல்குளிப்பப் பதிகமோது
ஞ், சேயுடையாரணநதியைக்குஞ் செவியுடையாரளவிறந்த திசைக
ளெட்டுந், தோயுடையார்பொனணிதழிச்தொடையுடையார் விடவர
வஞ்சுற்றுமால, வாயுடையார்புகழ்பாடப்பெறுமேயெம்மலயெண்சாண்
மனிதயாக்கை. (௧)

### அங்கயற்கண்ணம்மையார் வணக்கம்.

வேதனெடுமாலாதிவிண்ணுடர்மண்ணுடர்விரதயோகர்
மாதவர்யாவருங்காணமணிமுறுவல்சிறிதரும்பமாடக்கூட
லாதனிருதிருக்கரந்தொட்டம்மியின்மேல்வைத்தகயலுண்கட்செல்வி
பாதமலரொழுபிறவிக்கடனீந்தும்புணையென்பார்பற்றிலாதோர். (௨)

### மேற்படி - வேறு.

ஓலவாய்மறைகடேறுமொருவன்றன்னுலகந்தன்னைச்
சேலவாயுழலுநாரைக்கருளியசெயலீதம்ம
நீலவாய்மணிநேர்கண்டனெடியநான்மாடக்கூட
லாலவாயாகச்செய்தவருட்டிறமெடுத்துச்சொல்வாம். (௩)

சித்திரமேருவென்றதிரண்டதோட்சுகுணன்பின்பு
சித்திரவிரதன்சித்ரபூடணன்றிண்டேர்வல்ல
சித்திரதுவசன்வென்றிச்சித்திரவருமன்வன்றோட்
சித்திரசேனன்சீர்சால்சித்ரவிக்கிரமனென்போன். (௪)

---

(௧) பழியழல் - அபிசாரயாகத்தின்சுடத்தீ. சேய்-திருஞானசம்பந்தப்பிள்ளையார். ஆரணம் - திருநெறித்தமிழ்வேதம்.

(௩) ஓலம்-ஒலி. நீலவாய்மணி-நீலரத்தினம்; இதில் நீலம் என்பது நீல்எனக் கடைகுறைந்து நின்றது. (௪) சித்திரம் - அழகு.

மணிகெழுதேரிராசமார்த்தாண்டனிராசசூடா
மணியணிமுடியிராசசார்த்தூலவழுதிசிந்தா
மணிநிகர்துவிசராசகுலோத்தமன்மடங்காவென்றி
மணிநிகழ்பொலம்பூணாயோதனப்பிரவீணன்மன்னோ (௫)

இயம்பருந்திறலிராசகுஞ்சரன்பரவிராச
பயங்கரன்கைகரும்பைந்தாருக்கிரசேனன்பாளைச்
சயங்கெழுதோணமேலேந்துசத்துருஞ்சயன்வீமததேர்
வயங்கெழுமன்னன்வீமபராக்ரமவழுதிமாதோ. (௬)

பெய்வளைவிந்தைசோந்தபிரதாபமார்த்தாண்டப்பேர்த்
தெவ்வடுசிலையான்றோவிக்கிரமகஞ்சுகன்றேரார்போரா
வெளவியசமரகோலாகலனெனும்வாகைவேலா
னவ்வியமவித்தசிந்தையதுலவிக்கிரமனென்போன். (௭)

எழில்புனையதுலகீர்த்தியெனவிருபத்திரண்டு
வழிவழிமைந்தராகிவையகங்காத்தவேந்தா
பழிதவிரதுலகீர்த்திபாண்டியன்றன்பாலின்பம்
பொழிதரவுதித்தகீர்த்திபூடணன்புரக்குநாளில். (௮)

கருங்கடலேழுங்காவற்கரைகடந்தார்த்துப்பொங்கி
யொருங்கெழுந்துருத்துச்சீறியும்பரோடிம்பரொட்டுப்
பொருங்கடகரியுமெட்டும்பொன்னெடுங்கிரியுநேமிப்
பெருங்கடிவரையுமப்பேரப்பிரளயங்கோத்ததன்றே. (௯)

அப்பெருஞ்சலதிவெள்ளத்தாழ்ந்தனவழிவிலாத
வெப்பெரும்பொழிலுமேழுதீபமுமிவற்றுட்டங்கி
நிற்பனசெல்வவானதிணைகளுநீண்டசென்னிப்
பாப்பதவகையுமீறுபட்டனவாகவங்கண் (௧௦)

தேனிழிகுதலைத்தீஞ்சொற்சேனெடுங்கண்ணிகோயில்
வானிழிவிமானம்பொற்றாமரைவிளையாட்டின்வந்த
கானிழியிடபக்குன்றங்கரிவரைநாகக்குன்ற
மானிழிவரைவராகவரைமுதலழிவிலாத. (௧௧)

---

(௫) சிந்தாமணி - கேட்டதைக்கொடுக்குமோர் தெய்வமணி.
(௬) வீமத்தேர் வயங்கெழுமன்னன் - வெற்றிமிகுந்த பீமரத பாண்டியன். (௭) விந்தை - ஜயலட்சுமி. தேரார் - பகைவர்.
(௯) நேமிப்பெருங்கடிவரை - சக்கரவாளகிரி. பொழில்-நாடு; இது ஈண்டு, நவகண்டங்களை யுணர்த்திநின்றது. நிற்பன செல்வ வானதிணை-நிலையியற்பொருள், இயங்கியற்பொருள். பர்ப்பதம்-மலை.
(௧௧) கான் - மணம்.

வெள்ளநீர்வறப்பவாதிவேதியன்ஞாலமுன்போ
லுள்ளவாறுதிப்பநல்கியும்பரோடிம்பரேனைப்
புளளொடுவிலங்குநல்கிக்கதிருடற்புத்தேண்மூவர்
தள்ளருமரபின்முன்போற்றமிழ்வேந்தர்தமையுந்தந்தான். (௧௨)

கலிவிருத்தம்.

அங்கியைமதிமரபென்றுமாழியுட்
டங்கியகலையெனுன்கிரட்டிதன்னொடும்
பொங்கியநிலாமதிபோலத்தோன்றினான்
வங்கியசேகரவழுதிமன்னனே. (௧௩)

தாளணிகழலினான்றங்கணாயகன்
கோளணிபுரிசைசூழ்கோயில்சூழவோர்
வாளணிகடிநகாசிறிதுவைகவைத்
தாளரியேறெனவவனிகாக்குநாள (௧௪)

செய்யகோன்மனுவழிசெலுத்தநீர்மையாற்
பொய்கெழுகலிப்பகைபுறந்தநதோடத்தன்
வையகம்பல்வளஞ்சுரப்பவைகலு
மெய்கெழுமன்பதைமிக்கவாலரோ. (௧௫)

பல்குறுமானிடப்பரப்பெலாமொருங்
கல்குறவிடங்குறைவாகவாய்மதுப்
பில்குறுதாரினன்பிறைமுடித்தவன்
மல்குறுகோயிலின்மருங்கரெய்தினான். (௧௬)

கறையணிகண்டனைத்தாழ்ந்துகைதொழு
திறையவநின்னருள்வலியினிந்நிலப்
பொறையதுவாற்றுவேற்கீண்டிப்போதொரு
குறையதுண்டாயினதென்று கூறுவான். (௧௭)

இத்தனைமாக்களுமிருககத்தக்கதாப்
பத்தனங்காணவிப்பதிக்கணதியே

---

(௧௨) ஆதிவேதியன் - சிவபெருமான், அல்லது அ.்.ரி - சிவபெருமான், வேதியன, பிரமன் எனப்பொருளகூறுவதுமொன்று கதிருடற்புத்தேண மூவர் என்றது-ஒளியுருவாகியசோமசூர்யாக்நிகளை. தமிழ்வேந்தர் - சேரசோழபாண்டியர்.

(௧௩) வங்கியசேகரன - வம்சசேகரன். (௧௪) கோள் - நவக்கிரகம். (௧௫) மன்பதை - மக்கட்கூட்டம். (௧௬) அல்கல் - வசித்தல். (௧௭) பத்தனம் - நகரம்.

வைத்தறைசெய்திடும்வரம்புகாண்கிலே
னத்தமற்றதனையின்றறியககாட்டென்றான். (௧௮)

நுண்ணியபொருளினுநுண்ணிதாயவர்
விண்ணிழிவிமானநின்றெழுந்துமீனவன்
றண்ணியவன்பினுககெளியசித்தராய்ப்
புண்ணியவருட்கடலாகிப்போதுவார். (௧௯)

பாம்பினாற்கடிசூத்திரங்கோவணம்பசுந்தாட்
பாம்பினாற்புரிநூல்சன்னவீரம்வெம்பகுவாயப்
பாம்பினாற்குழைகுண்டலம்பாதகிண்கிணிநாண்
பாம்பினாற்கரகங்கணம்பரித்தனர்வந்தார். (௨௦)

வந்தயோகர்மாமண்டபமருங்குநின்றங்கைப்
பந்தவாலவாயரவினைப்பார்த்துநீயிவனுக்
கிந்தமாநகரெல்லையையளந்துகாட்டென்று
ரந்தவாளராவடிபணிந்தடிகளைவேண்டும். (௨௧)

பெருமவிந்நகரடியனேன்பெயரினால்விளங்கக்
கருணைசெய்தியென்றிரந்திடக்கருணையங்கடலு
மருணயந்துநேர்ந்தனையதேயாகெனப்பணித்தா
னுருகெழுஞ்செலவுரகமுமொல்லெனச்செல்லா. (௨௨)

ஈட்டிசைத்தலைச்சென்றுதன்கேழ்கிளர்வாலை
நீட்டிமாநகர்வலம்படநிலம்படிந்துடலைக்
கோட்டிவாலைவாய்வைத்துவேறகொற்றவற்கெல்லை
காட்டிமீண்டரன்கங்கணமானதுகரத்தில். (௨௩)

சித்தர்தஞ்சினகரத்தெழுந்தருளினார்செழியன்
பைத்தவாலவாய்கோலியபடிசுவரெடுத்துச்
சுத்தநேமிமால்வரையினைத்தொட்டகழ்ந்தெடுத்து
வைத்ததாமெனவகுத்தனன்மஞ்சுசூழிஞ்சி. (௨௪)

தென்றிசைப்பரங்குன்றமும்வடதிசையிடபக்
குன்றமுங்குடக்கேடகநகரமுங்குணபாற்
பொன்றலங்கிழித்தெழுபொழிற்பூவணநகரு
மென்றுநாற்பெருவாயில்கட்கெல்லையாவகுத்தான். (௨௫)

---

(௨௦) கடிசூத்திரம் - அரைஞாண். பசுமை - இன்மை.
(௨௨) உரு - அச்சம். உரகம் - மார்பாற் செல்வது, பாம்பு.
(௨௪) இஞ்சி - மதில்.

அனையநீண்மதிலாலவாய்மதிலெனவறைறவர்
நனையவார்பொழினகரமுமாலவாய்நாமம்
புனையலாயதெப்போதுமப்பொன்னகர்தன்னைக்
கனையவார்கழற்காலினுன்பண்டுபோற்கண்டான். (உ௬)

கொடிகணீண்மதின்மண்டபங்கோபுரம்வீதி
கடிகொள்பூம்பொழிலின்னவும்புதியவாக்கண்டு
நெடியகோளகைகிரீடம்வாணிழன்மணியாற்செய்
தடிகள்சாத்தியகலன்களும்வேறுவேறமைத்தான். (உஎ)

பல்வகைப்பெருங்குடிகளும்பரப்பெலாநிரப்பிச்
செல்வவானவன்புரந்தரன்புரத்தினுஞ்சிறப்ப
மல்லன்மாநகர்பெருவளந்துளும்பிடவளர்த்தான்
றொல்லைநாட்குலசேகரன்போல்வருதோன்றல். (உஅ)

நாற்பத்தொன்பதாவது

திருவாலவாயானபடலம் - முற்றிற்று.

ஆக படலம் - ருஅ - க்கு திருவிருத்தம் - உஙசகூ.

---

ஐம்பதாவது

## சுந்தரப்பேரம்பெய்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அங்கணருரகமணிந்தருள்வடிவமடைந்தரசகமகிழக்
கங்கணவிடவரவங்கொடுகடிநகர்கண்டருண்முறையிதுவாகுஞ்
சங்கணிகுழையினர்பஞ்சவன்வழிபடுதம்பெயரொழுதியகூர்
வெங்கணைகொடுவளவன்படைமுடுகியவென்றியையினிமொழிவோம்.

வெங்கயனீள்கொடிவங்கியசேகரன்வெண்குடைநீழலின்வாய்
வங்கமுலாவியதெண்கடன்ஞாலமடந்தையுமாசறுசீர்ச்
செங்கமலாலயமங்கையும்வாலியதிண்பதுமாலயமே
னங்கையுமோவறமங்கலமானநயம்பெறுவாழ்வுறுநாள். (உ)

---

(உஎ) கோளகை-வட்டம். (உஅ) செல்வவானவன் - குபேரன்.
(க) வளவன்-விக்கிரமச்சோழன். வென்றி, இது காரியவாகுபெயராய்த்திருவிளையாடலாகிய காரணத்தை விளக்கிநின்றது.
(உ) ஓவு - ஒழிவு.

வேழமறப்படைசூழவெதிர்ந்தவர்வீறுகெடுத்தடியிற்
றாழவடர்த்திகல்வாகைதொடுத்தலர்தார்புனைவிக்கிரம
சோழன்மதிக்குலநாயகனைப்பொருசூள்கருதித்தொலையா
வாழ்கடலுக்கிணையாமனிகத்தொடுமோடமருக்கெழுவான். (௩)

கயபதிகாய்சினரபதிபாய்துரகதபதியேமுதலா
வயமிகுதோள்வடதிசையினராதிபர்வலிகெழுசேனையினோ
டியமிடியேறிமிழிசையெனவாய்விடவிரதமதேறிநடாஅய்ப்
பயன்மலிகாவிரிநதியருகேயுறைபதிகொடுமேயினனால். (௪)

சிலைத்தெழுசெம்பியன்வெம்படைமள்ளர்செயிர்த்துமதிக்கடவுட்
குலத்தவனாட்டினிருந்தெழிலானிரைகொண்டுகுறும்புசெய்து
மலர்த்தடமேரியுடைத்துநகர்க்குவரும்பலபண்டமுமா
றலைத்துமுடக்கிநடுக்கம்விளைத்துமமர்க்கடியிட்டனரால். (௫)

மாறனதிந்நிலையென்செய்துநேரியன்வன்படையோவளவின்
றேறியெதிர்ந்தமராடினனைக்கரிதிக்குறையைப்பிறையோ
டாறணிபூரணசுந்தரனேநதையடிதலைமுன்குறுகாக்
கூறியிரந்தவரைப்பெறுகென்றிறைகோயிலடைந்தனனால். (௬)

அடைந்துபணிந்தருணாயகனேயடியேனொடுவிக்கிரமன்
றொடர்ந்தமராடவியற்புலமன்னவர்தொகையொடுபாசறைவாய்ப்
படர்ந்திறைகொண்டனனோபொரவொத்தபதாதியெனக்கிலையே
மிடைந்துவரும்படைமிக்கவிடத்தரண்வேறுளதோவிறைவா. (௭)

என்னையினிச்செயுமாறெனமாறனிரந்துமொழிந்திடலு
முன்னவன்வானிடையின்றசரீரிமொழிந்தருள்வான்முதனீ
யன்னவனோடமராடிறுமடைந்துதவித்துணையாய்
நின்னதுவாகையெனப்பொருகின்றனனீயினியஞ்சலெனா. (௮)

சிந்தைகளித்திருகண்கடுளித்திருசெங்கைகுவித்திறைவ
னந்திமதிச்சடையந்தனைத்தொழுதன்றுபுறப்படமுன்
வந்தனனேற்றுவனந்திவரைக்கயல்வந்ததுவிக்கிரமன்
வெந்தறுகட்படையென்றரசற்குவிளம்பினனப்பொழுதே. (௯)

---

(௩) பொருசூள் - போர்த்தொழிலைக் குறிக்கும் வஞ்சினம்.

(௪) துரகம் - குதிரை. (௫) குறும்பு - கொடுந்தொழில். ஆறலைத்தல் - வழிபறித்தல். அடியிடல் - தொடங்கல்.

(௬) ஏறி - மேற்சென்று. (௭) பாசறை - படைவீடு.

(௯) நந்திவரை - இடபமலை.

அரசனியம்பலவதிரவலம்புரியலறவலங்குளோமா
ணிரதமணைநிடவிசைகொடுசிந்தைபிணிடவலவன்கடைப்
புரசைநெடுங்கரிநிரையெறியுங்கடல்பொருபரிவிண்டொடுதேர
விறைசெய்நாறுந்தொடைவிருதர்கணம்புடைவிரவநடந்தனனால். ()

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அளந்துசூழ்திருவாலவாய்மதிலின்புறத்தகழாழிபோல்
வளைந்தசோழனெடும்படைக்கெதிரவஞ்சிவேய்ந்தெழுபஞ்சவன்
கிளர்ந்தசேனையதிர்ந்துகிட்டினகிட்டியவ்விருபடைஞருங்
களஞ்சிறந்திடவஞ்சினங்கொடுகைவகுத்தமர்செய்வரால். (௧௧)

சையமொத்தெழுதேரினொடுசையமொத்தெழுதேரரு
மையனமைக்கரிவீரரோடெதிர்மையனமைக்கரிவீரருங்
கொய்யுளைப்பரிவயவரோடிகல்கொய்யுளைப்பரிவயவருங்
கையழற்படைவீசிமின்விடுகாளெனப்பொருவாரரோ. (௧௨)

முடங்குவெஞ்சிலைவில்லரோடுமுடங்குவெஞ்சிலைவில்லரும்
விடங்கலுழ்ந்திடுவேலரோடுவிடங்கலுழ்ந்திடுவேலரு
மிடங்கைதோல்வலவாளரோடுமிடங்கைதோல்வலவாளரு
மடங்கலேறுமடங்கலேறுமலைப்பதென்னமலைப்பரால். (௧௩)

அரவினன்னிலமம்புயம்பொறையாற்றுமீனவனாற்றல்கூர்
புரவியின்னிரைவையமேல்கொடுபோந்தநேரியர்வேந்தனோ
டிரவிமின்னியமுரசியம்பமிடைந்துவெஞ்சமராடுமா
றிரவிதன்னொடுமதியவன்பொரவேகினானிகராகுமால். (௧௪)

துள்ளுமாவொலிதானயாறுதுளும்புமாவொலிதூண்டுதேர்
தள்ளுமாவொலிபடையொடும்படைதாக்குமாவொலிபொருகராத்
தெள்ளுமாவொலிமள்ளர்பைங்கழலேங்குமாவொலியீங்கியத்
தெள்ளுமாவொலிவேறுபாடுதிரிந்துகலலெனலாயதே. (௧௫)

துடித்தவாளரவென்னவீசியதூங்குகையினவீங்குநீர்
குடித்தகாரொடுகார்மலைந்திடுகொள்கைபோலவுடன்றுடன்

(௧௦) உளை - புறமயிர். (௧௧) வஞ்சி - போர்மேற்செல்வோரணியுமாலை. (௧௪) அரவு-ஆதிசேடன். வையம்- தேர்.

(௧௫) துள்ளுமா, தேர்தள்ளுமா என்பன - குதிரைகளை. தானயாறுதுளும்புமா - யானை. இச்செய்யுளில்வரும் ஏனையமா என்னு மோரெழுத் தொருமொழிகள் பெருமை என்னும்பொருளன.

திடுத்தவராயினவசனியேறினிருப்புலக்கையெடுத்தெறிந்
தடுத்தசோரியொடாவிசோரவிழுந்தவெஞ்சினவானையே. (கசு)

எய்தவாளியிலக்குவார்பிறிதெய்யும்வாளிதமார்புபோழ்
செய்தபோதவராண்மைகண்டுசிரித்துவென்றிவியப்பரால்
வைதவாயடிவேலெறிந்திடவருவதைக்குறிவழியினாற்
கொய்தனாமறவாளெறிந்துகுறைத்துவேறுபடுத்துவார். (கஎ)

பின்னிடாதிருபடையுமொத்தமராடுமெல்லைபெரும்படைச்
சென்னிதன்றுணையாயவுத்தரதேயமன்னவர்படையொடுந்
துன்னிஞாலமுடிக்குநாளெழுசூறைதசள்ளவதிர்ந்தெழும்
வன்னியென்னவுடன்றெதிர்ந்தனர்வழுதிசேனையுடைந்ததே. (கஅ)

மின்னிலங்கிலைவாளொடுஞ்சிலைவில்லிழந்தனர்வீரரோ
டன்னலம்புனைதேரொடுங்கரிபரியிழந்தனர்பாகரோ
டென்னவன்பொருவலியிழந்தனனென்றுசெம்பியன்வாகையுந்
தன்னதென்றுதருக்குமேல்கொடுசங்கெடுத்துமுழக்கினான். (ககூ)

அந்தவேலையின்முனருந்தமதருவெனக்குளிர்கடிபுனற்
பந்தர்நீழலளித்துமோடைபடுத்தியும்பகைசாயவே
வந்தவேடருவண்ணமேயொருமானவேடரசாய்வலஞ்
சிந்தவாகுலமூழ்குமீனவர்சேனைகாவலராயினார். (உ0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குன்றயில்வேடன்சாபங்குழைவித்துச்சூதகோச
னென்றதன்றைமந்திட்டியிட்டகூர்ங்கணைகடேண்டி
வென்றனமென்றுவாகைமிலைந்துவெண்சங்கமார்த்து
நின்றவன்சேனைமீதுநெறிப்படச்செலுத்தாநின்றான். (உக)

அம்முனைவாளியொவ்வொன்றடல்புனைநூற்றுநூறு
தெம்முனைவீரர்தம்மைச்செகுத்துயிருண்ணநோக்கி
யிம்முனைவாளியொன்றுக்கிதுதுணைவலியாதென்று
வெம்முனைமறவேற்சென்னிவியந்தநுமானமெய்தா. (உஉ)

---

(கசு) அசனி - இடி. (கஎ) வை-கூர்மை.

(கஅ) உத்தரதேயம்-வடதேயம். சூறை - சண்டமாருதம். வன்னி - வடவாமுகாக்கினி. (உஉ) நூற்றுநூறு - இதுபண்புத்தொகையாய் பதினாயிரமென்னும் எண்மேனின்றது. அநுமானம்-புகையைக் கண்டு நெருப்புண்டெனவறிதல்.

அன்னகூர்வாளிதன்னைக்கொணர்கெனவதனைவாசிந்
தின்னதுசுந்தரேசனெனவவரைந்திருப்பதிது
தென்னவற்காலவாயான்றுணைசெய்தசெயலென்றஞ்சிப்
பொன்னிநாடுடையான்மீண்டுபோகுவான்போகுவானை. (உரு)

செருத்துணையாகிவந்தவுத்தரதேயத்துள்ளார்
தருககரொட்டியர்வேறுள்ளார்யாவருஞ்சூழ்ந்துநில்லென்
றுருத்தனர்வைதுநீபோர்க்குடைந்தனைபோதியீதுன்
கருத்தெனிறுண்மையாவர்கண்ணதுன்மானமென்றும். (உ௭)

செல்லலைவருதியென்றுச்செயிர்த்தெழுந்திடியிறார்த்துக்
கல்லெழுவனையதிண்டோட்கௌரியன்படைமேற்சென்று
வில்லிறவலித்துவாங்கிவேறுவேறாகிநின்று
சொல்லினுங்கடியவாளிதொடுத்தனர்விடுத்தார்தூர்த்தார். (உரு)

வடுத்தவாமருமச்செம்புண்மறமகனுகின்ற
கடுத்தவாமிடறுமூக்கட்கண்ணுதற்சாமிதான்மூன்
னெடுத்தவாடகவிலன்னவிருஞ்சிலைவாளியொன்று
தொடுத்தவாடவர்தாம்விட்டசுடுசரந்தொலைத்துப்பின்னும். (உசு)

பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துமான்றேரைச்சாய்த்தான்
பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துவெங்களிற்றைமாய்த்தான்
பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துவாம்பரியைக்கொன்றான்
பத்தம்புதொடுத்துநூற்றுப்பத்துமானிடரைவென்றான். (உ௭)

நூறம்புதொடுத்துநூறுநூறுவெம்பரிமேலெய்தான்
நூறம்புதொடுத்துநூறுநூறுவெங்கரிமேற்பெய்தான்
நூறம்புதொடுத்துநூறுநூறுதேர்சிதையவிட்டான்
நூறம்புதொடுத்துநூறுநூறுசேவகரையட்டான். (உஅ)

ஆயிரம்வாளியானூறாயிரம்பரியைக்கொன்றான்
ஆயிரம்வாளியானூறாயிரங்கரியைவென்றான்
ஆயிரம்வாளியானூறாயிரந்தேரைச்சாய்த்தான்
ஆயிரம்வாளியானூறாயிரம்பேரைத்தேய்த்தான். (உகூ)

தடிந்தனதோளுந்தாளுந்தகர்ந்தனசென்னிமண்ணிற்
படிந்தனமடிந்தோர்யாக்கைபரிந்தனதும்பைத்தாமம்

---

(உரு) சொல் என்றது-முனிவரிடும்சாபத்தை.
(உசு) மருமம் - மார்பு.

மடிந்தனமைபல்யானைமாண்டனதாண்டும்பாய்மா
வொடிந்தனகொடுஞ்சிமானத்தேரொடுதுஞ்சினவொழிந்தசேனை. (௬௦)

ஆவிமுன்போயதாமுமருக்கமண்டலத்தாறேகத்
தாயுமவ்வன்னவாடுதலைபலசிலைவாள்பட்டுக்
கூவிளியெடுத்துவீழாக்குறைத்தலையாடப்பாதிச்
சாவுடனின்றுகைகள்கொட்டுவதாளமென்ன. (௬௧)

தரைவிழுந்தனதுசென்னிவீட்டினார்தம்மைநின்ற
குறையுடற்கைவேல்குத்திநூக்குவகுரவைபாடி
வெறிபடுதலைகள்வாய்மென்றெயிறதுகறித்துவீழ்ந்து
கறுவினமார்புதட்டிநிற்பனகவந்தயாக்கை. (௬௨)

ஒருவயிற்பட்டுவீழுமிருதலையொன்றற்கொன்று
மருவியமெய்ம்மைத்தாகிவாயெயிறிலங்கநக்குப்
பிரியறவந்தாய்நீயுமென்றெதிராபேசிப்பேசிப்
பரிவுறமொழிந்துமோந்துபாடிநின்றாடல்செய்த. (௬௩)

மாகவாறியங்குசேனம்வல்லிருட்குவையினன்ன
காகம்வன்கழுகுவெம்போர்க்களனிடையவிந்துவீழ்ந்தோ
ராகமேற்சிறகடிக்கொண்டசைவனவேடைநீக்கப்
பாகநின்றாலவட்டம்பணிப்பனபோன்றவன்றே. (௬௪)

வெள்ளமாச்சோரியீர்ப்பமிதக்கின்றதேர்கள்வெம்பேய்ப்
பிள்ளைகண்மூழ்கிக்கீழ்போய்மறித்தெனப்பெயர்ந்துவீழ்வ
தெள்ளுநீர்க்கடலின்மீதார்சிதைக்கலநிரையுந்தாக்கித்
துள்ளிமற்றவற்றைச்சாய்க்குஞ்சுறவமும்போன்றவன்றே. (௬௫)

கத்திநின்றுருபாலீர்ப்பக்கருங்கொடிசேனந்துண்டங்
கொத்திநின்றுருபாலீர்ப்பக்குடவயிற்றழல்கட்பூதப்
பத்திநின்றுருபாலீர்ப்பப்பட்டவராகங்கூளி
பொத்திநின்றுருபாலீர்ப்பவைம்பொறிபோலமன்றே. (௬௬)

துடுவைவான்முறங்காறள்ளுந்துணைச்செவியரிசிகோட்டி
யுடுவைநேர்மணியின்குப்பையுரலடியுலக்கைதிண்கோ

---

(௬௦) ஒழிந்தசேனை என்றது - வில் வாட்சேனைகளை.
(௬௧) குறைத்தலை - கவந்தம். பாதிச்சாவுடல் - முற்றுஞ்சாகாதவுடல். (௬௨) கறித்து-கடித்து. குரவை-கைகோத்தாடல்.
(௬௪) மாகம் - ஆகாயம். வேடை - வெப்பம்.
(௬௬) கொடி - காக்கை. துண்டம் - மூக்கு. கூளி-பேய்.
(௬௭) துடுவை - துடுப்பு. உடு - நட்சத்திரம். மணி - முத்து. கடம் - கதுப்பு.

டடுகலங்கடந்தீச்சோரிமத்தகமடுப்பென்றியானைப்
படுகளம்விசயச்செல்வியடுமடைப்பளிமாறுவ. (௩௭)

பிணத்தினைக்கோலிபபுண்ணீராற்றினைப்பெருகவிட்டுக்
கணத்தினையுதைத்துநூக்கிக்கரையுடைத்தொருவன்பூத
நிணத்தொடும்வருமந்நீத்தநேர்படவிருந்துகையா
லணைத்துவாய்மடுக்கும்வைகையருந்திபபூதமென்ன. (௩௮)

புரத்தினுளுயர்ந்தகூடற்புண்ணியனெழுதியெய்த
சரத்தினிலவிந்தார்சென்னிக்குற்றுழிசசார்வாய்வந்த
வரத்தினையறுக்குமவைவேலயற்புலவேந்தர்நச்சு
மரத்தினையடுத்தசாந்துங்கதழெரிமடுத்ததென்ன. (௩௯)

மாசறுகாட்சியான்றன்வாளியாலவிந்தோர்தம்மை
மூசுவண்டென்னச்சூழ்ந்துமொய்த்தனபைத்தகூளி
காய்சினச்சேனங்காகங்கழுகினம்பற்றியீர்த்துப்
பூசவிட்டொன்றோடொன்றுபோர்செய்வான்றொடங்கிற்றம்ம. (௪௦)

வெஞ்சினமறக்கோனம்பிவிடுகணைவெள்ளத்தாழ்ந்து
வஞ்சினமுறுதன்சேனைமடிந்ததுகண்டுமாழாந்
தெஞ்சினபடையுஞ்சூழவேதிலார்நகையுஞ்சூழத்
துஞ்சினமறமுஞ்சூழச்சோழனுமுடைந்துபோனான். (௪௧)

வில்லொடுமேகமன்னவெஞ்சிலைவேடவேந்தன்
மல்லொடுபயின்றதென்னன்மலர்முகச்செவ்விநோக்கி
யல்லொடுமதிவந்தென்னவருணகைசிறிதுபூத்துச்
செல்லொடுபகைபோற்கொண்டதிருவுருமறைந்துபோனான். (௪௨)

பாடுவாயளிதேனூட்டும்பைந்தொடைச்செழியன்வென்றிக்
கோடுவாயவைத்திட்டாரதுக்குஞ்சரமுகட்டியெழுந்
தோடுவாய்கிழிக்குங்கண்ணார்மங்கலந்துவன்றியேய்ந்த
நீடுவார்திரைநீர்வேலிநீண்மதிநகரிற்புக்கான். (௪௩)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

சிலைவிற்சேவகஞ்செய்துவாகைவாங்கித்திருவளித்தசேவகற்குச்
சிறந்தபூசை, நிலைவித்தாய்மணிப்பொலம்பூணிறுவிச்சாத்தி நிழல்விரி

(௩௮) நூக்கி- தள்ளி. (௩௯) புரத்தினுளுயர்ந்த கூடல் என்றது - காசி, அயோத்தி, மாயை. காஞ்சி, அவந்திகை, துவாரகைமுதலியவற்றிற்கும் மேற்பட்டுநிற்கும் மதுரையை. (௪௧) துஞ்சினமறம்என்றது - தோல்வியை. (௪௩) வென்றிக்கோடு - ஜயசங்கம்.

க்கும்வெயின்மணியா னெடியமேரு, மலைவிற்றானென்னவரிச்சிலையு
நாமம்வரைந்தகடுங்கூர்ங்கணையும்வளைந்துசாத்தி, யலைவிததாழ்கட
லுலகுக் ககலச்செங்கோ லறம்பெருக்கும் வங்கியசேகரனுமண்ணல்

ஐம்பதாவது

சுந்தரப்பேரம்பெய்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் - ௫௰ - க்கு திருவிருத்தம் - ௨௩௬௩.

---

ஐம்பதொன்றாவது

## சங்கப்பலகைதந்தபடலம்.

வேடுருவாகிமேருவில்லிதன்னுமக்கோலெய்
தாடமராடித்தென்னனடுபகைதுரந்தவண்ணம்
பாடினஞ்சங்கத்தார்க்குப்பலகைதந்தவரோடொப்பக்
கூடிமுத்தமிழினசெல்வம்விளக்கியகொள்கைசொல்வாம். (௧)

வங்கியசேகரன்கோல்வாழுநாண்மேலோர்வைகற்
கங்கையந்துறைசூழ்கன்னிக்கடிமதிற்காசிதன்னிற்
பங்கயமுளரிப்புத்தேள்பத்துவாம்பரிமாவேள்வி
புங்கவர்மகிழ்ச்சிறாங்கமறைவழிபோற்றிச்செய்தான். (௨)

நிரப்பியவழிநாணன்னீராடுவாணிண்டவீணை
நரப்பிசைவாணிநாவிற்றிரியெனுநங்கைவேத
வரப்பிசைமனுவாங்காயத்திரியெனுமடவாரோடும்
பரப்பிசைகங்கைநோக்கிப்படருவான்படருமெல்லை. (௩)

நானவார்குழலினரம்மூவரினுவின்செல்வி
வானவாறியங்கும்விஞ்சைமாதராளொருத்திபாடுங்
கானவாறுள்ளம்போக்கிநின்றனள்கமலயோனி
யானவாலறிவனேகியந்நதிக்கரையைச்சேர்ந்தான். (௪)

---

(௪௯) அலைவி - ஐம்பகை. இதனை முன்னர்காண்க.

(௧) நாமக்கோல்-திருப்பெயரொழுதிய அம்பு. (௨) கோல்வாழுநாள் - செங்கோல் செல்லுங்காலை. கன்னி - அழிவில்லாத. -

(௩) வழிநாள் - பின்னாள். வரம்பு - வரப்பெனவலிந்துநின்றது. வீணைஎன்றது - பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழென்னு நால்வகையாழினை. (௪) நானம் - வாசனை.

நாமகள்வரவுதாழ்ப்பநங்கையிருவரோடுந்
தாமரைக்கிழவன்மூழ்கித்தடங்கரையேறுமெல்லைப்
பாமகள்குறுகியென்னையன்றிநீபடிந்தவாறென்
னமெனவெகுண்டாள்கேட்டவம்புயத்தண்ணல்சொல்வான். (ரு)

குற்றநின்மேலதாகநம்மைநீகோபங்கொள்வ
தெற்றெனவினையதீங்கையெண்ணறுமாக்கடோற்ற
முற்றனையொழித்தியென்னவுரைத்தனன்சாபமேற்கும்
பொற்றொடிமடந்தையஞ்சிப்புலம்புகொண்டவலம்பூண்டாள். (சு)

ஊனிடரகன்றேயுன்னருயிர்த்துணையாவேனிந்த
மானிடயோனிப்பட்டுமயங்குகோவென்னவண்டு
தேனிடையழுந்திவேதஞ்செப்பும்வெண்கமலச்செல்வி
தானிடரகலநோக்கிச்சதுமுகத்தலைவன்சாற்றும். (எ)

முகிழ்தருமூலநின்மெய்யாமுதலெழுத்தைம்பதொன்றிற்
றிகழ்தரும்ஆகாராதிஹாகாரமீறசெப்பிப்
புகழ்தருநாற்பத்தெட்டுநாற்பத்தெண்புலவராகி
யகழ்தருகடல்சூழ்ஞாலத்தவதரித்திடுவவாக. (அ)

அத்தகுவருணமெல்லாமேறிநின்றவற்றவற்றின்
மெய்த்தகுதன்மையெய்திவேறுவேறியக்கந்தோன்ற
வுய்த்திடும்அகரத்திற்குமுதன்மையாயொழுகுநாதர்
முத்தமிழாலவாயெம்முதல்வரம்முறையான்மன்னே. (கூ)

தாமொருபுலவராகித்திருவுருத்தரித்துச்சங்க
மாமணிப்பீடத்தேறிவைகியேநாற்பத்தொன்ப
தாமவராகியுண்ணின்றவரவர்க்கறிவுதோற்றி
யேமுறப்புலமைகாப்பாரொன்றனன்கமலப்புத்தேள். (ய)

அக்கரநாற்பத்தெட்டுமவ்வழிவேறுவேறு
மக்களாய்ப்பிறந்துபன்மாண்கலைகளின்வகைமைதேர்ந்து
தொக்கவாரியமுமேனைச்சொற்பதினெட்டுமாய்ந்து
தக்கதென்கலைநுண்டேர்ச்சிப்புலமையிற்றலைமைசார்ந்தார். (கக)

(சு) மாக்கள்தோற்றம் - மானிடப்பிறவி. (எ) ஊனிடர்-பிறவித்துன்பம். (அ) முகிழ் - தாமரையரும்பு. மெய் - தேகம். முதலெழுத்து - உயிரும்மெய்யுமாகிய வெழுத்துக்கள்.

(கூ) வருணம், எழுத்து. (கக) பல்மாண் கலைகளின் வகைமை என்றது - பலவகைப்பட்ட, அறம்பொருளின்ப வீடுகளையுணர்த்து நூல்களினுண்ணியபொருள்களை. ஆரியம் - வடகலை.

கழுமணிவயிரம்வேய்ந்தகலன்பலவன்றிக்கண்டிக்
கொழுமணிக்கலனும்பூணுங்குளிர்நிலாநீற்றுமெய்யர்
வழுவறத்தெரிந்தசெஞ்சொன்மாலையாலன்றியாய்ந்த
செழுமலர்மாலையாலுஞ்சிவார்ச்சனைசெய்யுநீரார். (௧௨)

புலந்தொறும்போகிப்போகிப்புலமையால்வென்றுவென்று
மலர்ந்ததண்பொருநைநீத்தவளங்கெழுநாட்டில்வந்து
நிலாத்தருதிருவினான்றனிறைநிதிச்செழியன்செங்கோ
லலந்தருமதுரைநோக்கிநண்ணுவார்நண்ணுமெல்லை. (௧௩)

பற்பலகலைமாண்டேர்ச்சிப்பனுவலின்பயனாய்நின்ற
வற்புதமூர்த்தியெந்தையாலவாயடிகளங்கோர்
கற்பமைகேள்விசான்றகல்வியின்செல்வராகிச்
சொற்பதங்கடந்தபாதமிருநிலந்தோயவந்தார். (௧௪)

அவ்விடைவருகின்றாரைநோக்கினீராரைநீவி
ரெவ்விடைநின்றும்போதுகின்றனிரென்னவன்னார்
வெவ்விடையனையீர்யாங்கள்விஞ்சையரடைந்தோர்பாவம்
வெளவிடுபொருநைநாட்டின்வருகின்றேமென்னலோடும். (௧௫)

தனிவருபுலவர்நீவிர்தண்டமிழாலவாயெங்
கனிவருகருணைமூர்த்திகனைகழலிறைஞ்சல்வேண்டு
மினிவருகென்னநீரோவெங்களுக்களவில்கோடி
துனிவருவினைகடீர்க்குஞ்சுந்தரக்கடவுளென்றார். (௧௬)

மறையினாறொழுகும்பன்மாண்கலைகள்போன்மாண்டகேள்வித்
துறையினாறொழுகுஞ்சான்றோர்சூழமீண்டேகிக்கூடற்
கறையினார்கண்டத்தாரைப்பணிவித்துக்கரந்தாரொற்றைப்
பிறையினார்மகுடந்தோற்றாதறிஞராய்வந்தபெம்மான். (௧௭)

விம்மிதமடைந்துசான்றோர்விண்ணிழிவிமானமேய
செம்மலைவேறுவேறுசெய்யுளாற்பரவியேத்திக்
கைம்மலையுரியினார்தங்காறொழுதிறைஞ்சிமீண்டு
கொய்ம்மலர்வாகைச்செவ்வேற்செழியனைக்குறுகிக்கண்டார். (௧௮)

---

(௧௨) கழுமணி - சாணைதீர்ந்த மாணிக்கம். (௧௪) சொற்பதங் கடந்தபாதம் - ஆகமவளவைக்கெட்டாத் திருவடி. (௧௫) விஞ்சையர் - புலவர்கள். (௧௬) தனிவருபுலவர் என்றது - சோமசுந்தரக் கடவுளை. (௧௭) கலைகள் என்றது - வேதாங்கங்களை.

மறமலிநேமிச்செங்கோன்மன்னவன்வந்தசான்றோ
ரறமலிகேள்விநோக்கியவைககளக்கிழமைநோக்கித்
திறமலியொழுக்கநோக்கிச்சீரியாபோலுமென்று
நிறைறமலியுவகைபூத்தநெஞ்சினனிதனைச்செய்தான். (க௯)

திங்களங்கண்ணிவேய்ந்தசெக்கரஞ்சடிலநாதன்
மங்கலம்பெருகுகோயில்வடகுடபுலத்தின்மாடோர்
சங்கமண்டபமுணடாக்கித்தகைமைசால்சிறப்புநல்கி
யங்கமர்நதிருத்தியொன்னவிருத்தினைறினர்தமமை. (உ0)

வண்டமிழ்நாவினூர்கருமன்னவன்உரிமைசநல்கக்
கண்டுளம்புழுங்கிமுன்னைப்புலவரக்கழகத்தோரை
மண்டினர்மூண்டுமூண்டுவொறுசெய்காற்றமுட்டிப்
பணடையபுலனுந்தோற்றுபபடருழந்தெய்த்துப்போனார். (உக)

இனையர்போல்வந்தவந்தமறுபுலத்திருக்குங்கேள்வி
வினைஞருமதமேற்கொண்டுவிளையவினையவொதரும்செய்து
மனவலியிளைப்பவென்றுவைருவோரொசனைறவேண்டிய
புனையிழைபாகநீங்காப்புலவர்முனணணினறோ. (உஉ)

மூந்துநூன்மொழிந்தார்தம்மைமுறைமையால்வணங்கியெய்வை
வந்துவந்தெவருமவாதருசெய்கின்றார்வரிசையாக
வந்தமில்புலமைதூக்கியளப்பதாயெம்மனோர்க்குத்
தந்தருள்செய்திசங்கப்பலகையொன்றென்றுதாழ்ந்தார். (உ௩)

பாடியபாணற்கன்றுவலியவேபலகையிட்டார்
பாடியபுலவர்வேண்டிற்பலகைதந்தருளார்கொல்லோ

---

(க௯) மறம் - வெற்றி. அவைககளக்கிழமை - நல்லவை, நிறை
டவை எனனும் கல்விசசபைகட்குரிய உரிமைத்திறம் நல்லவை
நிறையவைஎன்றதை - "புகழுந்தருமநெறி நினறோர்பொய்காமம்-
இகழுஞ்சினஞ்செற்ற மில்லோர்-நிகழ்கலைகள் - எல்லாமுணர்ந்தோ
ரிருநதவிடமன்றோ - நல்லாரவைக்குநலன் எனவும், நலமடக்கஞ்
செம்மை நடுவுநிலைநான்குங் - குலனென்றறிவுடையோர் கோபில் -
புலனில்லோர் - சென்றுமொழிந்தனவுங் கேட்டோர்செறிந்தவிடம்-
அன்றோநிறைந்தவவை எனவும்வருஞ்சங்கச்செய்யுள்களாலறிக.

(உ0) வடகுடபுலம் - வடமேற்குத்திசை. (உக) மண்டினர் -
நெருங்கினர். (உஉ) மதமேற்கோடலாவது - தாங்கொண்டதை
விடாமை. ஒன்றுஎன்னும் வரையறைப்பண்பு, புலவர் சீர்தூக்குங
கருவிமேல் நிற்றலால் பண்பாகுபெயர்.

(உ௩) மூந்துநூல் - முதனூல்.

பாடியபுலவராகும்படியொருபடிவங்கொண்டு
பாடியபுலவர்காணததோன்றினூர்பலகையோடும். (௨௪)

சதுரமாயளவிரண்டுசாணதிப்பலகையம்ம
மதியினும்வாலிதாகுமந்திரவலியதாகு
முதியநூம்போல்வார்க்கெல்லாமுழமவளர்ந்திருக்கைநல்கு
மிருநூமக்களவுகோலாயிருக்குமெனறியமபியீந்தார். (௨௫)

நாமகளுருவாய்வந்தநாவலாதமக்குவெள்ளைத்
தாமமாயமளிதன்னைப்பலகையாத்தருவதென்னக்
காமனைமுனிந்தார்நலகக்கைகொடுகளிறுதாங்கு
மாமணிககோயிறன்னைவலங்துதங்கழகம்புக்கார். (௨௬)

நாறுபூந்தாமநாற்றிநறும்பனிதோய்நதசாந்தச்
சேறுவண்மலர்வண்சேசெழும்புகைதீபமாதி
வேறுபல்வகையாற்பூசைவினைமுடிததிறைஞ்சிக்கீர
னேறினன்கபிலனேடுபரணனுமேறினனே. (௨௭)

இருங்கலைவல்லோரெல்லாமிம்முறையேறியேறி
யொருங்கினிதிருந்தாயார்குமொததிடங்கொடுத்துநாதன்
றருஞ்சிறுபலகையொன்றேதன்னுளைசெய்வோர்க்கெல்லாஞ
சுருங்கிநின்றகலங்காட்டித்தோன்றுநூலபோனறதனறே. (௨௮)

மேதகுசான்றோர்நூலின்வினைபொருள்விளங்கத்தம்மி
லேதுவுமெடுத்துககாட்டுமெழுவகைமதமுங்கூறும்
போதகவைகளிந்தபின்னைபூவையேபுறம்புபோந்து
வாதுசெய்வார்கள்வந்தான்மறுத்துநோநிறுத்துமன்னே. (௨௯)

கலிவிருத்தம்.

ஆயவாறெண்புலவருமாய்ந்துணர்
பாயகேள்விப்பயன்பெறமாட்சியாற்
றூயபாடலெழுடங்கினர்செய்துகொண்
டேயவாறிருந்தாரந்தவெல்லைவாய். (௩௦)

பலருஞ்செய்தபனுவலுமாண்பொருண்
மலருஞ்செல்வமுஞ்சொல்லின்வளமையுங்

(௨௫) வாலிது - புனிதமுள்ளது. மந்திரவலி என்றது - அன்றன்று தன்னினின்று முழம்வளர்ந்து இடங்கொடுப்பதாதலின்.

(௨௮) அகலங்காட்டல் - பொருள் விரிந்துநிற்றல்.

(௨௯) ஏது - காரணம். காட்டு - உதாரணம். எழுவகை மதமாவன - உடன்படல். மறுத்தல்முதலியன.

குலவுஞ்செய்யுட்குறிப்புமொத்தொன்றிட
நலமயங்கிக்கிடந்தவத்தன்மையால் (௯௧)

வேறுபாடறியாதுவியந்துநீர்
கூறுபாடலிதுவென்றுங்கோதிலென்
றேறுபாடலிதுவென்றுஞ்செஞ்செவே
மாறுபாடுகொண்டார்சங்கவாணரே. (௯௨)

மருளுமாறுமயக்கறவான்பொருட்
டெருளுமாறுசெயவல்லகள்வர்சொற்
பொருளுமாமதுரேசர்புலவர்மு
னருளுநாவலராய்வந்துதோன்றினா (௯௩)

வந்தநாவலர்வந்திக்குநாவலர்
சிந்தையாகுலஞ்செய்யமயக்குறும்
பந்தயாப்பைக்கொணாகெனப்பாவல
ரொந்தையீங்கிவையென்றுமுன்னிட்டனா. (௯௪)

தூயசொல்லின்பொருளின்றொடர்ச்சியு
மாயநாவலரவ்வவர்தம்முது
வாயபாடல்வகைதெரிந்தவ்வவர்க்
கேயவேயெடுத்தீந்தனரொன்பவே. (௯௫)

வாங்குசங்கப்புலவர்மனங்களித்
தீங்குநீரொமரோடொருத்தரா
யோங்கிவாழ்திரொன்றொல்லெனத்தங்களைத்
தாங்குசெம்பொற்றவிசிலிருத்தினார். (௯௬)

பொன்னின்பீடிகையென்றும்பொன்றுரமேற்
றுன்னுநாவலர்சூழ்மணியாகவே
மன்னினாரநெடுநாயகமாமணி
யென்னவீற்றிருந்தார்மதுரேசரே. (௯௭)

நதியணிந்தவர்தம்மொடுநாற்பத்தொன்
பதின்மரொன்னப்படும்புலவோரொலா
முதியவான்றமிழ்பின்னுமுறைமுறை
மதிவிளங்கத்தொடுத்தவண்வாழுநாள். (௯௮)

---

(௯௨) செஞ்சவே-இது சேரோனென்னும் பொருள்தந்துநின்றது.
(௯௪) பந்தம் - தளை.

கலிநிலைத்துறை.

வங்கியசேகரன்வங்கியசூடாமணிதன்னைப்
பொங்கியதேசார்முடிபுனைவித்துப்புவிநல்கி
யிங்கியல்பாசவினைப்பகைசாயவிருந்தாங்கே
சங்கியல்வார்குழையானடியொன்றியசாபுற்றான். (௫௯)

ஐம்பத்தொன்றாவது
சங்கப்பலகைதந்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் - ௫0 - க்கு - திருவிருத்தம் - ௨௪௬௨.

---

உ

ஐம்பத்திரண்டாவது

## தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம்.

கலிநிலைத்துறை.

பொற்குவைதேரும்பாவலர்மேவத்தொகுபீட
மற்குவைகண்டத்தண்ணலளித்ததறைந்தேமாற்
றற்குவைதந்தாலுய்குவலென்னுந்தருமிக்குப்
பொற்குவைநல்கும்வண்ணமெடுத்துப்புகல்கிற்பாம். (௧)

மன்னவர்மன்னன்வங்கியசூடாமணிமாறன்
றென்னவராகித்திகிரியுருட்டுஞ்சென்கூடன்
முன்னவரன்னங்கண்டறியாதமுடிக்கேற்பப்
பன்மலர்நல்குநந்தனம்வைக்கும்பணிபூண்டான். (௨)

மாதவிபாதிரிதாதகிகூவிளமந்தாரந்
தாதவிழ்மல்லிகைமுல்லையிலஞ்சிதடங்கோங்கம்
வீதவழ்கொன்றைகரந்தைசெழுங்கரவீரந்தண்
போதவிழ்நந்திசெருந்திகுருந்தம்புன்னாகம். (௩)

முண்டகமென்கடிநீலமுதற்பலமுப்போது
மெண்டிசையுங்கமழும்படிநந்தனமெங்குந்தே
னுண்டிசைவண்டுபடிந்துமுரன்றிடவுண்டாக்கி
வண்டிமிர்சண்பகநந்தனமுந்தனிவைத்தானால். (௪)

---

(௧) உவைஎன்றது - பொற்கிழியை. (௩) மாதவி-குருக்கத்தி. தாதகி-ஆத்தி. இலஞ்சி - மகிழ். வீ-வண்டு. கரவீரம் - அலரி.
(௪) வண்டிமிர்சண்பகம் என்றதுஜாதியடை.

பொய்த்திடுநுண்ணிடைமங்கலமங்கையர்பொன்பூண்
டோத்தெழுசணபகமொய்த்தவரும்பருடைந்தெங்கும்
வைத்திடுநந்தனவாசம்விழுங்கிமணங்கான்று
பைத்துமலர்ந்தனகண்டுமெகிழ்ந்துபரித்தேரான். (௫)

செருக்கியவண்டுவிழாமலர்கொய்துதெரிந்தாய்ந்து
நெருக்கியவிண்டைநிரைத்தொடைதொங்கனெடுந்தாம
மருக்கிளர்கண்ணிதொடுத்தணிவித்துவணங்காரூர
கருக்கியகண்ணுதலார்திருமேனிகவின்செய்தான். (௬)

அன்னவியன்பொழின்மாமதுரேசரடித்தாழ்வோன்
பொன்னவிர்சண்பகமாலைபுனைந்தபுதுக்கோலந
தன்னையியந்திவர்சண்பகசுந்தரர்தாமென்று
முன்னரிறைஞ்சினனிம்பமணிந்தமுடித்தென்னன். (௭)

அன்னதொர்நாமம்பெற்றனரின்றுமணிக்கூடன்
முன்னவரந்தத்தாமமவர்க்குமுடிக்கேற்று
மின்னதோர்நீராற்சணபகமாறனென்றேபேர்
மன்னிவிளங்கினன்வங்கியசூடாமணிதானும். (௮)

சண்பகமாறன்சண்பகசுந்தரர்தம்பாடே
நண்பகமாறுநன்பணிசெய்யுநனாளிற்
பண்பகர்சொல்லார்தம்புடைமாரன்படுபோர்மூண்
டெண்பகவெய்வாளுகியவந்தன்றிளவேனில். (௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மனிதர்வெங்கோடைதீர்க்கும்வசந்தமெனகாலும்வேறு
துனிதவிரிளங்கால்வேண்டுஞ்சோலையுஞ்சோலைவேண்டும்
புனிதநீர்த்தடமும்வேறுபுதுமலரோடைவேண்டும
பனிதருமதியும்வேறுபான்மதிவேண்டுங்காலம். (௧௦)

அண்டவான்றருமேற்சீறிச்செலந்தெழுந்தாங்குத்தேமா
தண்டளிரீன்றுவானந்தைவரநிவந்தகாசு
கொளடிடையழுத்திச்செய்தகுழையணிமகளிர்போல
வணடிறைகொளளப்பூத்துமலர்ந்தனசெருந்தியெல்லாம் (௧௧)

(௬) இண்டை - தண்டவடிவாகத் தொடுத்தமாலை. தொடை - சரமாகத்தொடுக்குமாலை. தாமம் - கோத்தமாலை. கண்ணி - வட்டயாகத்தொடுத்தமாலை. வணங்கார - பகைவர்.

(௯) எணபக - அளவிறப்ப. (௧௦) இளங்கால் - தென்றல்.

செங்கதிர்மேனியான்போலவிழ்ந்தனசெழும்பலாச
மங்குலூர்செல்வன்போலமலர்ந்தனகாஞ்சிதிங்கட்
புங்கவன்போலப்பூத்தபூஞ்சினைமரவஞ்செங்கை
யங்கதிராழியான்போலலர்ந்தனவிரிந்தகாயா. (கஉ)

தளைகிழித்தெழுநீர்வைகைத்தடங்களையெக்கரல்கு
லரவமேகலைசூழ்ந்தென்னவலர்ந்துதாதுகுப்பஞாழன்
மரகதந்தழைத்துவெண்முத்தரும்பிப்பொன்மலர்ந்துவாங்குந்
திரைகடற்பவளக்காடுசெயவனகன்னிப்புன்னை. (கங)

ஊடினார்போலவெம்பியிலையுதிர்ந்துயிரன்னாக
கூடினார்போலவெங்குங்குழைவரத்தழைததுநீங்கி
வாடினார்போலககண்ணீர்வாரமெய்பசந்துமைய
லீடினாலர்போற்பூத்துநெருங்கினமரங்களெல்லாம். (கச)

விழைதருகாதலார்தாமெலிவுறமெலிந்துநெஞ்சங்
குழைவுறக்குழைந்துரிற்குங்கோதிலாக்கற்பினார்போன
மழையறுங்கோடைதீப்பமரந்தலைவாடவாடித்
தழைவுறத்தழைத்துநின்றதழீஇயபைங்கொடிகளெல்லாம். (கரு)

சேட்டிகைத்தெனகாறள்ளததெண்மதுச்சிதறத்தும்பி
நீட்டிசைமுரலச்சாயாநின்றுபூநகொம்பராட
ஞட்டியப்புலவனட்டநகைமுகம்வெயர்வைசிந்தப்
பாட்டிசைத்தாடாநினறபாவைமாரபோன்றவன்றே. (கசா)

மலர்ந்தசெல்வந்திப்போதும்வகுளமுமுதிர்ந்துவாடி
யுலர்ந்துமொய்த்தளிதேனக்ககிடப்பனவுள்ளமிக்க
குலந்தருநல்லோர்செல்வங்குன்றினுந்தம்பாலில்லென்
றலர்ந்தவர்க்குயிரைமாறியாயினுங்கொடுப்பரன்றே. (கஎ)

நாறியதண்ணந்தேமாநறுந்தளிர்கோதிக்கூவி
யூறியகாமர்ப்பேட்டையுருக்குவகுயின்மெனசேவல்

(கஉ) கதிர் - சூரியன். மங்குலூர்செல்வன்-இந்திரன். மங்குல் - மேகம். மரவம் - குங்குமமரம். ஆழியன் - திருமால்.

(கங) எக்கர் - மேடு. அரவம - ஒலி. ஞாழல்-குங்குமமரம். மரகதம் - பசிய இலைகள். (கச) குழை - தளிர். கண்ணீர் - கண்களினின்றுஞ் சிந்தும்நீர், கள்ளாகியநீர். பசந்து - பசுமையாய், பசலைபூத்து. அலர் - அல்லாதவா. (கசா) திசை-திக்கு. நீட்டிசை-நெட்டிசை. (கஎ) அலம் - துன்பம். உள்ளமிக்க என்றது-பெருந்தளணத்தை. (கஅ) நாறல் - தளிர்த்தல். மாறியவேந்தன் என்றது - குறு நிலமன்னனை.

வீறியசெங்கோல்வேந்தன்வெளிப்படத்தேயங்காவன்
மாறியவேந்தன்போலவொடுங்கியமயில்களெல்லாம். (௧௮)

பொங்கரினுழைந்துவாவிபுகுந்துபங்கயந்துழாவிட்
பைங்கடிமயிலைமுல்லைமல்லிகைப்பந்தர்தாவிக்
கொங்கலர்மணங்கூட்டுண்டுகுளிர்ந்துமெல்லென்றுதென்ற
லங்கங்கேகலைகடேருமறிவன்போலியங்குமன்றே. (௧௯)

தாமரைகளாஞ்சிதாங்கத்தண்குயின்முழவமேங்க
மாமருதமருங்கிளைமங்கலமியம்பத்தும்பி
காமரமிசைப்பமுள்வாய்க்கைதைவாளெடுப்பவேனிற்
கோமகன்மகுடஞ்சூடியிருப்பதகுளிர்பூஞ்சோலை. (௨௦)

கலையினுனிறைந்தவிந்துகாந்தமண்டபத்திற்செய்த
மலையினுமெழுதுமாடமருங்கினுநெருங்குசோலைத்
தலையினுங்கமலவாவித்தடத்தினுந்தண்முத்தார
முலையினுமன்றிக்கோடைமுடிவிடங்காணார்மைந்தர். (௨௧)

நிலந்தருதிருவினன்றநிழன்மணிமாடக்கூடல்
வலந்தருதடந்தோண்மைந்தர்வானமும்வீழும்போக
நலந்தருமகளிரோடுநாகநாடவர்தஞ்செலவப்
பொலந்தருவனையகாட்சிப்பூம்பொழினுகர்வான்போவார். (௨௨)

மேற்படி வேறு.

மாத்தாண்மதமாவெருத்தின்மடங்கலெனச்செல்வாரும்
பூத்தாரொலிவாம்பரிமேற்புகர்மாவெனப்போவாரும்
பாத்தார்பரிதியெனவாம்பரித்தேருகைத்தூர்வாருந்
தேத்தாருளர்வண்டலம்பச்சிலம்பினடகின்றாரும். (௨௩)

நீலப்பிடிமேற்பிடிபோனெறிக்கொள்வாருந்தரள
மாலைச்சிவிகைமிசைவெண்மலராளெனச்செல்வாரு
மாலைக்கரும்பன்றுணைபோலளித்தார்ப்பரியூர்வாருங்
கோலத்தடக்கைபற்றிக்கொழுநருடன்போவாரும். (௨௪)

---

(௨௦) காமரம் - இசைப்பாட்டு. (௨௧) செய்தமலை - செய்குன்றம். வீழும - விரும்பும். பொலந்தரு - பொற்றருவாகிய கற்பகம். வானம் - இடவாகுபெயர்

(௨௩) புகர்மா - யானை. பாத்தார்பரிதி - பன்னிருபகுதியவாய சூரியர்கள். சிலம்பு - மலை. (௨௪) கரும்பன் - மன்மதன். துணை என்றது - இரதிதேவியை.

கருப்புக்கமழ்தேஙகண்ணித்தொடைபைங்கழலாடவருங்
கருப்புச்சிலைமன்னவனுற்கருவிப்படையன்னவரும
விருப்புற்றெறிநீர்வைகைவெள்ளத்தரளநதெள்ளிப்
பொருப்பிற்குவிக்கும்புளினம்புறஞ்சூழ்சோலைபுகுவார். (உரு)

கூந்தற்பிடியும்பரியுமூர்வார்கொழுநர்தடந்தோ
ளேந்தச்சடமாதென்னத்தழுவாவிழிந்துபொழில்வாய்ப்
பூந்தொத்தலர்பொற்கொடிதாதுகுமாறென்னப்புனைந்த
சாந்தக்கலவைபுகப்போய்வனமங்கையர்போற்சார்ந்தார். (உசு)

ஏமாசலமென்முலையாரநடையோவியமேயென்னப்
பூமாதவிசேர்வாரும்புன்னைநிழல்சேர்வாருந்
தேமாநிழல்சேர்வாருஞ்செருந்திநிழல்சேர்வாருங்
காமாயுதசாலைகள்போற்கைதைநிழல்சேர்வாரும். (உஎ)

கோடும்பிறைவாணுதலார்குழலைக்கருவிக்காரென்
றோடுந்தோகையவாகண்ணோக்கிக்கணையென்றஞ்சி
யோடுங்கொடியினன்னுருருமாந்தளிரொன்றயில்வா
ளோடுங்குயிலன்னவர்பண்ணிசைகேட்டொதுங்கிநாணும். (உஅ)

நீடுந்தரங்கமிரங்குநிறைநீர்நிலையேயன்றிப்
பாடுஞ்சுரும்புண்கழுநீர்பைந்தாட்குமுதம்பதுமங்
கோடும்பூத்தவெனனக்கொடியேரிடையார்குழையுந்
தோடுங்கிடந்தவதனந்தொகையாற்பொலிவசோலை. (உகூ)

பிடிகளென்னநடந்தாருடன்போயகொழுநர்பெருந்தண
கொடிகண்மிடைந்தவில்லியக்கர்போலக்குறுகிக்
கடிகொள்பனிநீர்சொரிந்துவேடைதணித்துங்கன்று
மடிகள்பிடித்துஞ்சேடியவர்கைக்குதவியாவார். (௩0)

மைவார்தடங்கண்மடவார்வளைப்பார்கொம்பின்மலரைக்
கொய்வார்குமிழ்மோந்துயிர்ப்பார்குழையுஞ்செவியுங்குழலும்
பெய்வார்மகிழ்ச்சிசெய்வார்பேராமையல்கூர
வெய்வாரகணைபோற்றைப்பக்கொழுநர்மார்பத்தெறிவார். (௩க)

---

(உரு) படையன்னவர் - மன்மதன் சேனையாகிய பெண்கள். தெள்ளி - கொழித்து. புளினம்- மணற்குன்று.
(உசு) கூந்தற்பிடி - புறமயிரினையுடைய பெண்யானை. தொத்து - கொத்து. வனமங்கையர் - வனதேவர்களை.
(உஎ) ஏமாசலம் - பொன்மலை. கைதை - தாழை.
(உஅ) கருவிக்கார்-சூன்முதிர்ந்த மேகம். (உகூ) தரங்கம்-அலை. கோடு - பூங்கொம்பு. (௩க) குமிழ் என்றது - நாசியை.

முத்தேர்நகையார்வளைப்பமுகைவிண்டலர்பூங்கொம்பர்ப்
புத்தேள்வண்டும்பெடையும்புலம்பிகருழலிற்புகுந்து
தெத்தேயெனப்பாண்செய்துதீந்தேனருந்துந்துணையோ
டொத்தேழிசைபாடிகளுணனும்பாணரொத்தே. (கஉ)

மேற்படி வேறு.

இம்பர்வீடளிகருந்தெய்வமகளிரோவென்பாராகூற்றம்
வம்பலமெபயேபோலும்வளைக்கையார்வளைப்பத்தாழ்ந்து
கம்பமுற்றடிப்பூசசிந்திமலர்முகங்கண்ணீர்சோரக்
கொமபரும்பணிந்ததென்றூலுலகியலகூறற்பாற்றே. (கங)

மைக்கணுளொருத்தியெட்டாநிமிர்கொம்பைவளைக்குந்தோறுங்
கைககுநேர்படாமைவாடுங்கடிமலர்க்கொடிபோனிற்பது
தைக்கும்பூங்கணைவேளன்றுென்றுருமகன்றலைப்பட்டென்னை
யெய்க்கின்றாய்தோண்மேலேறிப்பறியெனவேற்றிநின்றான். (கச)

தையலாளொருத்தியெட்டாமலாக்கொம்பைத்தளிாக்கைநீட்டி
யையநுண்மருங்குனோவவருந்தலுமாற்றாக்கேள்வ
னெய்யெனவிதுவுமென்னையூடியமகளிரோயோ
கொய்யெனவளைத்துநின்றான்கண்மூத்தங்கொழிப்பநின்றாள். (கரு)

மைக்குழலொருத்திகாதில்வட்டப்பொன்னோலையூடே
திக்கயமனையான்கொய்தசெருந்திப்பூச்செருகிநோசகி
யிக்குழையழகிதென்றாளிடுவெங்கைக்கிடுதியென்று
வக்குழையோடும்வீசியன்பனுக்கலக்கண்செய்தாள். (கசு)

மயிலிளம்பெடையன்றோர்மாதர்மாங்குடம்பைசெல்லுங்
குயிலிளம்பெடைதன்றுவிச்சேவலைககூவநோக்கி
யயிலிளங்களிறன்றேனைக்கடைக்கணித்தளியுந்தேறும்
பயிலிளந்சோலைமாடோர்மாதவிபபந்தர்சேர்ந்தாள். (கஎ)

பாசிழையொருத்தியாற்றாப்புலவியாள்பைந்தாரான்முன்
பூசகில்வாசங்காலிற்போக்கியும்புனைபூண்காஞ்சி
யோசையைச்செவியிலுய்த்துங்கலவியிழைருவாநீட்டுந்
தூசினையுடுத்தும்போர்த்துந்தூதுவிட்டவள்போனின்றாள். (கஅ)

(கஉ) புத்தேள் - புதுமை. (கங) கம்பம - நடுக்கம்.
(கரு) எங்கை என்றது - தங்கையாயமைந்த பரத்தையை.
(கஎ) குடம்பை - கூண்டு. களிறன்னான் என்றது-கணவனை.
அளி - ஆண்வண்டு. தேன் - பெண்வண்டு. மாதவி - குருக்கத்தி.
(கஅ) புலவி - ஊடல்.

வாய்ந்தநாண்மலர்கொய்தீவான்மெய்யிலம்மலர்த்தேந்தாது
சாந்தமான்மதம்போற்சிந்திக்கிடப்பவோர்தையல்யாளைத்
தோய்ந்தசாந்தென்றானுள்ளதுன்னையுஞ்சுமந்துகொய்த
வாய்ந்தசண்பகத்தாதென்றனெய்சொரியழலினின்றாள்.　(௩௯)

பிணியவிழ்கோதையாளோர்பேதைதன்பதிதன்னூட
றணியவந்தடியில்வீழத்தன்னிழலனையான்சென்னி
மணியிடைகண்டுகங்கைமணாளனையொப்பீரோம்மைப்
பணிவதென்னென்றூநக்குப்பரிவுமேறபரிவுசெயதாள்.　(௪௦)

மதுகைவாளொருவனங்கோர்மங்கைதன்வடிவைநோக்கிப்
பதுமமேயடிகைகாந்தள்பயோதரங்கோங்குகாவிப்
புதுமலர்விழிவாயாம்பற்போதுநும்மூரலெப்போ
ததனைவாய்திறந்துகாட்டிப்போமினென்றடுத்துநின்றான்.　(௪௧)

விடைத்தனியேறன்னானோர்விடலையோர்வேறகணுண்முன்
கிடைத்துநும்மிடத்தெனவெனஞ்சங்கெட்டுவந்தொளித்ததல்குற்
றடத்திடையொளித்ததேயோதனத்திடையொளித்ததோபூம்
படத்தினைத்திறந்துகாட்டிப்போகெனப்பற்றிச்சென்றான்.　(௪௨)

மாந்தளிரடியார்சாய்ப்பவளைந்தபூஞ்சினைகண்டன்னா
கூந்தலிற்கிடந்தசெம்மற்கோதைமேல்வீழ்ந்தகறபி
னேந்திழையவளைநீத்துப்பலர்நுகாந்தெச்சிலாகும்
பூந்தொடியவளைதுய்க்கும்பேதையர்போன்றதன்றே.　(௪௩)

கலிவிருத்தம்.

புல்லிமைந்தர்பொருள்கவாந்தானொன
வல்லியன்னமடந்தையர்கொய்தலி
னல்லிநாண்மலரற்றபின்கைப்பொரு
ளில்லியென்னவிளைத்தனகாவெலாம்.　(௪௪)

மையுண்கண்ணியர்மைந்தரொடம்மலர்
கொய்யுஞ்செல்வநுகர்ந்துகொழுங்கனு
மெய்யுந்தோயிற்கொழுநரின்வேற்றுமை
செய்யும்பொய்கைதிளைப்பச்சென்றாரரோ.　(௪௫)

(௩௯) உன்னையும்என்றஉம்மை, நாயகன்கருத்தில் உயர்வுசிறப்பும்மையாகவும் – நாயகியின்கருத்தில் இறந்ததுதழீஇய எச்சவும்மையாகவும் பொருள் பயந்துநின்றது. (௪௦) பிணி-கட்டு. பரிவு-துன்பம். (௪௧) மூரல்-பல். மதுகை-பலம். (௪௨) படம் - வஸ்திரம். (௪௩) செம்மல்-பழம்பூ. பூந்தொடியவர் என்றது-விலைமாதரை.

அன்னமன்னவராடுங்கயந்தலை
நன்னர்நீலநளினங்குமுதமென்
றின்னவனறியெழின்முல்லைசண்பகம்
பொன்னங்கோங்கமும்பூத்தனபோன்றவே. (சசு)

கலிநிலைத்துறை.

குரவவோதியர்கயந்தலைகுறுகுமுனகயலு
மரவும்யாமையுமலவனுமன்னமுமகன்ற
பருவரால்களுமிரிந்தனபகைஞர்மேலிட்டு
வரவரோவெதிர்நிற்பரோவலியிழந்தவரே. (சஎ)

பண்ணெனுஞ்சொலார்குடைதொறும்பன்மலர்விழிப்ப
தண்ணெனுந்திரையலைதொறுநிரைநிரைதாக்க
கண்ணுநீலமுமுகங்களுங்கமலமும்வாயும்
வண்ணமாம்பலுந்தத்தமின்மலைவனவனைய. (சஅ)

கூழைபாசியின்விரிந்திடமகிழ்ந்துநீர்குடையு
மாழையுண்கணார்கொங்கையுமுகங்களுமருங்கா
சூழரும்பொடுமலர்ந்தசெந்தாமரைத்தொகுதி
யாழ்தரங்கநீரிடைக்கிடந்தலைவனவனைய. (சகூ)

தூயநீர்குடைந்தேறுந்தன்றுணைவியைத்துணைவன்
வாயுங்கண்களும்வேறுற்றவண்ணநகண்டென்க
ணேயவின்னுயிரனையவளெங்குளாளென்றுன்
காயும்வேற்கணாள்முலைகுளிப்பாட்டினன்கண்ணீர். (ருo)

மங்கைநல்லவளொருத்திநீராடுவான்மகிழ்ந
னங்கைபற்றினளேகுவாளவன்குடைந்தேறும்
பங்கயக்கணொருத்தியைப்பார்த்தனன்சிந்து
வெங்கையெச்சினீராடலேனெனக்கரைநின்றாள். (ருக)

வனைந்தபைங்கழலான்புனலாடலின்மார்பி
னனைந்தகுங்குமத்தலையெறிநளினமொட்டழுந்தப்
புனைந்தகொங்கையால்வடுப்படப்பொறித்தவள்யாவ
டினைந்தழுங்கினணெய்சொரியெரியெனவொருத்தி. (ருஉ)

---

(சசு) முல்லை, சண்பகம், கோங்கு என்பன நீராட்டயரும் மகளிரது, பல், மேனி, தனம் இவற்றை நிலைக்களனால் விளக்கி நின்றது.

(சகூ) கூழை - கூந்தல். (ருஉ) மொட்டு - அரும்பு.

வீழ்ந்தகாதலன்செய்ததீங்காகியவேலாற்
போழ்ந்தநெஞ்சினுள்புலவிநோய்பொருளவன்காண
வாழ்ந்ததீரிடையழுந்துவாள்போன்றயர்ந்தயலே
தாழ்ந்தவன்னத்தைநோக்கிக்கைதாவெனவிரந்தாள். (௫௩)

கரும்புபோன்மொழியாளொருகாரிகைவதனஞ்
சுரும்புசூழ்கமலங்களுட்கமலமாய்த்தோன்ற
விரும்புகாதலனையுற்றுமெலிந்தனனமெல்ல
வரும்புமுல்லைகண்டையத்தினீங்கிச்சென்றணைந்தான. (௫௪)

களித்தகாதலன்மொக்குள்வாய்த்தன்னிழல்கண்டு
தெளித்துவாணகைசெய்யமாற்றாளென்றுசீறிச
தளிர்க்கைநீட்டினள்கண்டிலடடவினள்சலத்து
ளொளித்தியோவெனவுதைத்தனள்பேதைமாதொருத்தி. (௫௫)

நாறுசுண்ணமென்கலவையுநானமுந்தம்மின்
மாறிவீசினின்றுடுவாமாலைதாழகலத
தூறுபாடறவந்சரததளிகவர்நதுண்ப
வாறுசெல்பவாபொருள்வௌவுமரட்டரோபோல (௫௬)

கொயயுநீலமுங்கமலமுங்கொண்டுகொண்டனாக
ணெய்யும்வாளியினெறிவராலெறிந்திடுமெலனாக
கையினுற்புடைத்தெறிந்தவர்கதிர்முகம்படக்கண
டைதுவாணகைசெய்தகமகிழ்ச்சியுளாழ்வா. (௫௭)

வாசமென்பனிநீரொடுசுண்ணமும்வாரி
வீசுவாரிளம்பிடியொடுவேழமாநினைபோற
காசுலாந்தொடிவில்லிடக்கைகளாலள்ளிப்
பூசுசாந்தவையழிந்திடப்புனிததீரிறைப்பார. (௫௮)

அப்பெரும்புனற்றடங்குடைந்தாடுவாராயத்
தொப்பருந்தனியொருமகளொருவன்றன்முகத்துத்
துப்பைவென்றசெந்துவரிதழ்ச்செய்யவாய்த்தூநீா
கொப்பளித்தனளாம்பலந்தேனெனகுடித்தான். (௫௯)

ஆழமவ்விடைச்செல்லலைநில்லெனவடுத்தோா
வேழமன்னவன்விலக்குவான்போலொருவேற்க

(௫௩) வீழ்தல் - விரும்பல். கைதா - கைகொடு, தாழை.
(௫௫) மொக்குள்-நீர்க்குமிழி. தன்னிழல்என்றது- மனைவியின் பிரதிபிம்பத்தை. (௫௬) உளறுபாடு - கவலை. அரட்டர் - குறுநில மன்னர். (௫௮) வில்-ஒளி. (௫௯) துப்பு-பவளம். துவர்-செம்மை.

ணமைழதன்னைக்கையால்வளைத்தேந்தி வண்டறைதார்
குழுமாபணைத்திரடிதோடோய்த்தவிறுத்தான். (௬0)

மாசிறுணமுஞ்சூடியமாலையுமெய்யிற்
பூசுசாந்தமுமாரமும்பொய்கைக்குக்கொடுத்த
வாசமெய்யினிலம்புயவாசமும்பயர்க
வாசைமைந்தரோடிளையவரகன்கரையடைவார். (௬௧)

தையலார்சிலர்நனைந்ததுண்டானையுட்பொதிந்த
மெய்யெலாம்வெளிப்படக்கரையேறுவான்வெள்கி
மையதாபொலந்துகிலெனவன்பரைக்கூய்க்கண்
செய்யமாயனைக்கேட்குமாய்ச்சியரொத்தார். (௬௨)

உலத்தைவென்றதோளாடவருச்சிமேற்பொழிந்த
வலத்தகத்தொடுகுங்குமமளைந்துசெம்புனலாய்
மலர்த்தடங்குடைந்தவர்களுகிராகுனவட்ட
கலத்தையொத்தனசுற்றநின்றோராத்தடிகள். (௬௩)

பட்டும்பன்னிறக்கலிங்கமும்பணமணிக்கலனும்
கொட்டுஞ்சாந்தமுநானமுங்குங்குமச்சேறும்
கட்டுந்தாமமுந்தமதுகட்டபூவெலாங்கரைய
மட்டுணகோதையராடவாமனமெலாங்கவர்ந்தார். (௬௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காவியுங்கமலப்போதுங்கள்ளொழுகாம்பற்போது
மாவியுட்பூத்தபோலவாடியுட்பூப்பநோக்கி
யேவிரண்டன்னகண்ணாலனங்கனையேவல்கொளளும்
பூவிரிபொலங்கொம்பனாருபுரமருங்கரப்புக்கார். (௬௫)

பொன்னினும்வெள்ளியாலும்பளிங்கினும்பவளத்தாலும்
நன்னிறக்கலத்திற்கூர்வாணட்டெனவாசித்திசைய
மின்னனார்களித்தேறற்சிறுதுளிவிரலிற்றெள்ளித்
துன்னிவீழ்களிவணடோச்சித்தொண்டையங்கனிவாய்வைப்பார். ()

---

(௬௧) மைந்தர் என்றது - கணவரை. (௬௩) அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு.

(௬௫) காவி-நீலோற்பலம். ஏ-அம்பு. (௬௬) சிறுதுளிவிரலிற்றெள்ளி என்றது-கள்ளுண்போர் மதுவைவிரலாற்சுட்டுத்தெறித்துப் பின்னருண்ணும் முறைமையை. தொண்டை - கோவை.

வள்ளத்துவாள்போல்வாக்குமதுக்குடந்தன்பாற்பெய்த
கொள்ளைத்தெண்மதுவைக்கொள்ளை கொளவந்தவள்ளமீதென்
றுள்ளத்துவெகுண்டுவைவாளூன்றிமாபிடப்பதொத்த
சள்ளைச்சூழ்காளைவண்டுசெருச்செயல்காண்பவொத்த. (௬௭)

தணியலுண்டுள்ளஞ்சோருமொருமகடணியலுண்பான்
பிணியவிழ்கோதையாளோர்பெண்மகளகலத்தில்வாக்குந்
துணிமதுத்தாரைதன்னைவாளெனத்துணிந்துபேதாய்
திணிகதிர்வாளாலவள்ளஞ்சிதைத்தியோவென்றுநக்காள். (௬௮)

மலர்தொறுஞ்சிறுதேனக்கித்திரிவண்டுமெடவார்தங்கைத்
தலனெடுத்தோச்சவோடாதழீஇத்தடஞ்சாடிமொய்ப்ப
விலமெனப்பல்லோர்மாட்டெமிரந்திரந்தின்மைநீங்கா
தலமரும்வறியோர்வைத்தநிதிகண்டாலகல்வரோயோ. (௬௯)

உண்டவளொருத்திகள்வாயுதிக்குந்தன்முகமுங்கண்ணுங்
கண்டுதாமரைகள்வேலைமுளைத்ததக்கள்ளையார
மொண்டுணப்பேதைத்தும்பியம்மதுமுளரிவாதே
னுண்டுளிசெறிவதென்றுநொடித்துக்கைபுடைத்துநக்காள். (௭௦)

மங்கையாளொருத்திநானுண்டெஞ்சியமதுவுட்டோன்றுந்
திங்களைநோக்கியென்னைப்பிரிவின்கட்டீயாய்ச்சுட்டா
யிங்குவந்தகப்பட்டாயேயினிவிடேன்கிடத்தியென்று
வங்கொருவள்ளங்கொண்டுசேமித்தாளருந்தல்செய்யாள். (௭௧)

வெவ்வியநறவமுண்டவிளங்கிழையொருத்திகையிற்
கௌவியவாடிதன்னிற்கருங்கயனெடுங்கட்சேப்புங்
கொவ்வைவாய்விளர்ப்புநோக்கியென்னலங்கூட்டுண்டேகு
மௌவியமனத்தான்யாரொன்றயாகின்றளயலாமொள்ள. (௭௨)

ஒருத்திகள்ளுண்கின்றாடன்னுருவமந்நறவுட்டோன்ற
வொருத்தியென்னுடன்வந்துண்பாள்காணெனவுண்டதோழி
யொருத்திவந்தெனசெய்வாடன்னுருவமுநோக்கிப்பேதா
யொருத்தியோவிருவவொன்றுளெசிலென்றுருத்துநக்காள். (௭௩)

---

(௬௭) காண்ப என்றது - பகரவீற்றுயர் திணைப்பலர்பாற்படர்க்கைவினை முற்றாதலின், காண்போர் எனப்பொருள்பயந்து நின்றது.

(௬௮) தணியல்-கள். (௭௦) வேலை-கடல். (௭௧) சேமித்தல்-சிறைப்படுத்தல். (௭௨) விளர்ப்பு - வெண்மை. கூட்டுணல், கொள்ளைகொள்ளல்.

சாடியுணறவமுண்டாடன்னுருவேறு பாட்டை
யாடியுனேக்கினாரேவல்லரேயெவளைக்கரான்கைம்மேவ
போடினர்பிறருமுண்டோவுயிரன்னான்வந்தெனைப்
தேடினென்செய்கேனென்னைத்தேடித்தாசேய யென்றாள். (...)

களித்தவளொருத்திநின்றவாடியுட்கணவன்றன்பி
னொளித்தவனுருவுந்தானுநேர்படவுருத்துநோக்கித்
துளித்தகண்ணீரளாகியேதிலாடோடோய்ந்தின்பங்
குளித்தனையிருத்தியோவென்றுதைத்தனள்கோபமூண்டாள். (எரு)

இளம்புளிந்தயிர்விராயவின்சுவைபொதிந்தசோறு
வளம்படவிருந்தினோடுமருந்துவார்வசந்தவீணை
களம்படுமெழாலினோடுகைவிரனடத்திக்காம
னுளம்புகுந்தலைப்பவெண்ணெய்ப்பாவைபோலுருகிச்சோர்வார். ( )

இவ்விளவேனிற்காலத்தினுயிர்த்துணைவியோடுஞ்
செவ்வியசெங்கோனேமிச்செண்பகமாறனோர்நாள்
கைவ்வினைவல்லோன்செய்தகதிர்விடுகொந்தக்குன்றில்
வெவ்வியவேடைநீப்பானிருந்தனன்வேறுவைகி. (எஎ)

மாந்தளிரீன்றுகோங்குவண்டளவரும்பித்தண்டேங்
காந்தள்செங்கமலமாம்பல்சண்பகங்கழுநீர்பூத்துச்
சாய்ந்தமென்கொடியுநானுந்தனியிடத்திருப்பானேபோ
யாய்ந்ததோர்நாற்றந்தோன்றவசைந்ததுவசந்தத்தென்றல். (எ௮)

வெவ்வியவேலான்வீசும்வாசமோந்தீதுவேறு
திவ்வியவாசமாகவிருந்ததுதென்றல்காவில்
வெளவியவாசமன்றுகாலுக்கும்வாசமில்லை
யெவ்வியல்வாசமேயோவிதுவெனவெண்ணங்கொள்வான். (எகூ)

திரும்பித்தன்றேவிதன்னைநோக்கினான்றேவியைம்பா
லிரும்பித்தைவாசமாகியிருந்ததுகண்டிவ்வாசந்

---

(எசு) வசந்தவீணை என்றது-பாலையாழ்வீணை. எழாலென்றது - பெரும்பாலை ஏழனுள், நாகநாதம் ஆசிரி, தோடி, கௌளி, காந்தாரம், செந்துருத்தி, உதயகிரிமுதலிய செம்பாலையை.

(எஎ) கைவினை - சிற்பத்தொழில். (எ௮) தளவு-முல்லை. மாந்தளிர்முதலிய உவமானச்சொற்கள், மேனிமுதலிய உவமேயங்களை யுணர்த்திநின்றது. (எகூ) திவ்ய=திவ்-விண்ணுலகில், ய-பிறப்பது.

(௮0) ஐம்பால் என்றது-முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சையென ஐம்பகுப்பினவாயமைந்த கூந்தலை. பித்தை-கூந்தல்.

சுரும்பிற்குந்தெரியாதென்னுச்சூழ்ந்திறும்பூதுகொண்டு
கரும்பித்தைக்கியல்போசெய்கையோவெனவையங்கொண்டான். ( )

ஐயுறுகருத்தையாவராயினுமறிந்துபாடல்
செய்யுநரவர்க்கேயின்னவாயிரஞ்செம்பொனென்றக்
கையுறைவேலானீந்தபொற்கிழிகைக்கொண்டேகி
மெய்யுணர்புலவாமுன்றூக்கினார்வினைசெய்மாக்கள் (௮௧)

வங்கத்தார்பொருள்போல்வேறுவகையமைகேழ்விநோக்கிச்
சங்கத்தாரெல்லாந்தமமிற்றனித்தனித்தேர்ந்துதேர்ந்து
துங்கத்தார்வேம்பனுள்ளஞ்சூழ்பொருடோல்வியுற்ற
பங்கத்தாராகியெய்த்துப்படருறுமனத்தரானார். (௮௨)

கலிவிருத்தம்.

அந்தவேலையிலாதிசைவரில்
வந்தமாணவனமணஞ்செய்வேட்கையான்
முந்தையாச்சிமமுயலும்பெற்றியான
றந்தைதாயிலானதருமியென்றுளான். (௮௩)

ஒருவனென்முகத்தொருவன்மாபுறை
திருவனுடருந்தேவனுரு
வருவனுலகன்றனைத்தனகலி
வெருவநாடிமுன்வீழ்ந்துவேண்டுவான் (௮௪)

தந்தைதாயிலேன்றனியனாகிய
மைந்தனேன்புறுவதுவைவேட்கையேன்
சிந்தைநோய்செயுஞ்செல்லறீர்ப்பதற்
கெந்தையேயிதுபதமென்றேத்தியே. (௮௫)

நெடியவேதநூனிறையவாகம
முடியவோதியமுறையினிறகெனும்

---

(௮௧) கிழி - முடிப்பு. (௮௩) மாணவன் - பிரமசாரி.

(௮௪) ஒருவன் என்றது - தனக்கோர் ஒப்புயர்விகந்துநின்றசிவ பெருமானை. திரு-இலக்குமி. உருவருவநாலகன்றான் என்றது-மகேஸ்வரன், உருத்திரன், திருமால், பிரமன் என்னும் உருவமும், சிவம், சத்தி, நாதம், விந்துஎனனும் அருவமும், சதாசிவமென்னும் அருவுருவமுமாகிய மூத்திறப்பட்ட தத்துவங்களை யதிட்டித்துநிற்குமசிவமுதற்பிரமனீறாகிய மூத்திறத்தொன்பது வர்க்கங்ளிலும்வேற்றுமையின்றிக் கலந்துநின்று, அவ்வத்தொழில்களை நடத்தித், தன்னியல்பு சிறிதும் விகாரமின்றிநிற்கும் சுத்தசிவத்தை.

(௮௫) செல்லல் - வறுமை.

வடிவில்லறவாழ்க்கையின்றிநின்
னடியருச்சனைக்கருகனுவனே. (சா)

ஐயயாவையுமறிதியேயொலோ
வையைநாடவன்மனக்கருத்துணர்ந்
துய்யவோர்கவியுரைத்தெனக்கருள்
செய்யவேண்டுமென்றிரந்துசெப்பினன். (எ)

தென்னவன்குலதெய்வமாகிய
மன்னர்கொங்குதேர்வாழ்க்கையின்றமிழ்
சொன்னலம்பெறச்சொல்லிநல்கினு
ரின்னறீர்ந்தவனிறைஞ்சிவாங்கினன். (அ)

பொற்றளிர்ச்சடைப்புவனநாயகன்
சொற்றபாடல்கைக்கொண்டுதொன்னிதி
பெற்றெடுத்தவன்போன்றபீடிறாக்
கற்றநாவலர்க்கழகநண்ணினுன். (கூ)

கல்வியாளர்தங்கையினீட்டினுன்
வல்லையாவரும்வாங்கிவாசியா
சொல்லினசெல்வமும்பொருளுநோக்கியோ
நல்லநல்லவென்றுவகைநண்ணினர். (கO)

அளக்கில்கேள்வியாரரசன்முன்புபோய்
விளக்கியக்கவிவிளம்பினர்கடன்
னுளக்கருத்துநேரொத்தலாற்சிரந்
துளக்கிமீனவன்மகிழ்ச்சிதூங்கினன். (கக)

உணர்ந்தகேள்வியாரிவரொடொல்லைபோய்
புணர்ந்தவாயிரம்பொன்றுவமின்றமிழ்
கொணர்ந்தவேதியர்க்கொள்ளவின்றென
மணந்தநாரிறன்மகிழ்ந்தானலினுன். (கஉ)

வேந்தனேவலால்விபுதர்சும்மொடும்
போந்துமீண்டவைப்புறம்புதூங்கிய
வாய்ந்தபொற்கிழியறுக்குநம்பியை
நேர்ந்துகீரனில்லெனவிலக்கினன். (கங)

(கங) விபுதர்மன்றது - தெய்வத்தன்மை பொருந்திய சங்கப் புலவரை.

குற்றமிக்கவிக்கென்றுகூறலுங்
கற்றிலானெடுங்காலம்வெம்பசி
யுற்றிவன்கலத்துண்ணுமெல்லைகைப்
பற்றவாடினான்பண்புபற்றினான். (௯௪)

உலர்ந்தநெஞ்சுகொண்டொதுங்கிநாயக
னலந்தருங்கழனண்ணினானவன்
மலர்ந்தபாடல்கொண்டறிஞரவைகிடந்
தலர்ந்தசிந்தைகொண்டடைந்தவைந்தனே. (௯௫)

செய்யுள்கொண்டுபோய்த்திருமுன்வைத்துளப்
பையுள்கொண்டவப்பனவனென்னைநீ
மையுண்கண்டவிவ்வழுவுபாடலைக்
கையுணல்கினாய்கதியிலேற்கெனா. (௯௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வறுமைநோய்பிணிப்பப்பன்னாளுழிபடுமடியேனின்பாற்
பெறுபொருளிழந்தேனென்றுபேசிலேன்யார்க்குமேலாங்
கறைகெழுமிடற்றோயநின்றனகவிக்குற்றஞ்சில்வாழ்நாட்சிற்
றறிவுடைப்புலவர்சொன்னாலாருனைமதிக்கவல்லார். (௯௭)

எந்தையிவ்விகழ்ச்சிநின்னதல்லதையெனக்கியாதென்னாச்
சிந்தைநோயுழந்துசைவச்சிறுவனின்றிரங்கயாரகும்
பந்தமும்வீடும்வேதப்பனுவலும்பயனுமான
சுந்தரவிடங்கனங்கோர்புலவனாய்த்தோற்றஞ்செய்தான். (௯௮)

கண்டிகைமதாணியாழிகதிர்முடிவயிரம்வேய்ந்த
குண்டலங்குடிகொண்டாகத்தழகெலாங்கொள்ளைகொள்ளத்
தண்டமிழ்மூன்றும்வல்லோன்றானெனக்குறியிட்டாங்கே
புண்டரநுதலிற்பூத்துப்பொய்யிருள்கிழித்துத்தள்ள. (௯௯)

விரிகதிர்ப்படாத்திற்போர்த்தமெய்ப்பையுளடங்கிப்பக்கத்
தெரிமணிக்கடகத்திண்டோளிளையவரடைப்பையோடுங்
குருமணிக்களாஞ்சியம்பொற்கோடிகந்தாங்கமுந்தாற்
புரிமதிக்குடைக்கீழ்ப்பொற்காற்கவரிபால்புரண்டுதுள்ள. (௧௦௦)

சொல்வரம்பிகந்தபாதமென்பதுதோன்றவேத
நல்லபாதுகையாய்ச்சூடநவின்றனகற்றுப்பாட

---

(௯௫) அவன்என்றது - சோமசுந்தரக்கடவுளை.
(௯௬) பையுள் - கவலை. (௯௯) பொய்யிருள்- மல்லிருள்.

வல்லவர்மறையினூறுமனுமுதற்கலைபோற்பினபு
செல்லநூலாய்ந்தோர்வைகுந்திருந்தவைக்களத்தைச்சேர்ந்தான். ( )

ஆரவைகுறுகிநேர்நின்றங்கிருந்தவரைநோக்கி
யாரைநங்கவிக்குக்குற்றமியம்பினாரொன்றுமுன்னங்
கீரனஞ்சாதுநானேகிளத்தினேனென்றானின்ற
சீரணிபுலவன்குற்றம்யாதெனத்தேராகீரன். (கoஉ)

சொற்குற்றமின்றுவேறுபொருட்குற்றமென்றான்றூய
பொற்குற்றவேணியண்ணல்பொருட்குற்றமென்னையென்ற
றற்குற்றம்வருவதோரானபுனைமலர்ச்சாபாலன்றி
யற்குற்றகுழற்குநாற்றமில்லையேயென்றானையன். (கoங)

பங்கயமுகமென்கொங்கைப்பதுமினிகுழலோவென்ன
வங்கதுமனைத்தேயென்றாலவாயுடையான்றெய்வ
மங்கையர்குழலோவென்னவன்னதுமந்தாரத்தின்
கொங்கலரளைந்துநாறுங்கொள்கையாற்செய்கைத்தென்றான். (கoச)

பரவிநீவழிபட்டேத்தும்பரஞ்சுடர்திருக்காளத்தி
யரவுநீர்ச்சடையார்பாகத்தமர்ந்தஞானப்பூங்கோதை
யிரவினீர்ங்குழலுமற்றேவெனவஃதுமற்றேயென்றா
வெருவிலானசலமேமுற்றச்சாதித்தான்விளைவுநோக்கான். (கoரு)

கற்றைறவாசடையானெற்றிக்கண்ணினைச்சிறிதேகாட்டப்
பற்றுவானின்னுமஞ்சானும்பரார்பதிபோலாக
முற்றுநீகண்ணுனாலுமொழிந்தநும்பாடல்குற்றங்
குற்றமேயென்றான்றன்பாலாகியகுற்றந்தேரான். (கoசு)

கலிநிலைத்துறை.

தேய்ந்தநாண்மதிக்கண்ணியானுதல்விழிச்செந்தீப்
பாய்ந்தவெம்மையிற்பொறாதுபொற்பங்கயத்தடத்தூ
ளாய்ந்தநாவலன்போய்விழுந்தாழ்ந்தனனவனைக்
காய்ந்தநாவலனிம்மெனத்திருவுருக்கரந்தான். (கoஎ)

ஐம்பத்திரண்டாவது

தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம் - முற்றிற்று.

ஆக படலம் - ருஉ - க்கு திருவிருத்தம் - உருஙக.

---

(கoக) மறையினூறும் என்றது - சிட்சைமுதலியசடங்கங்களை.
(கoஉ) ஆரவை - நிறையவை,
(கoங) பொற்குற்றவேணி என்றதில் - குற்ற என்பது குறுகிய
வென்னும் பொருளது. (கoச) மந்தாரம்-பஞ்சதருக்களிலொன்று.

ஐம்பத்துமூன்றாவது

# கீரனைக்கரையேற்றியபடலம்.

கலிநிலைத்துறை.

மாரனைப்பொடிகண்டவனந்தணமைந்தனுக
காரநற்கனகக்கிழியீந்ததறைநதன
மேரனத்திரள்சூழ்மலரோடையிடத்தினுங்
கீரனைக்கரையேற்றியவாறுகிளத்துவாம். (௧)

தாழ்ந்தவேணியனெற்றிமுளைத்தழற்கணாற்
போழ்ந்தநாவலனுடகபங்கயப்பொய்கைவாய்
வீழ்ந்தரும்படர்வேலையில்வீழ்ந்தனன்விம்முறச்
சூழ்ந்தநாவலர்கண்டுபொறாதுதுளங்குவார். (௨)

என்றவேந்தனிலாக்குடியீட்டமுமின்கதிர்
கான்றநாயகமாமணிபோகியகண்டியு
மான்றஞானமிலாதவர்கல்வியுமானதே
சான்றகீரனிலாதவைகூடியசங்கமே. (௩)

ஐயசொற்பொருடன்வடிவானவராலவாய்
மைதழைத்தமிடற்றினர்தம்மொடும்வாதுதான்
செய்தவிப்பிழையோபெரிதெப்படிதீருமோ
யுய்வதற்புதமேயெனயாவருமுன்னினான். (௪)

எய்திவெள்ளிமலைபெயர்த்தானுமிறுத்ததன்
கையில்வீணைதொட்டின்னிசைபாடக்கனிந்தவன்
செய்ததீங்குபொறுத்ததுமன்றித்திண்டேரொடு
மொயகொள்வாளுங்கொடுத்தனன்புண்ணியமூர்த்தியே. (௫)

யாவராலுமகற்றரிதிப்பிழையாவர்க்குந்
தேவராமவரோதிருவுள்ளந்திரும்பினாற
போவதேயிதுவேதுணிபென்றுபுகன்றுபோய்ப்
பாவலோர்பரன்றாணிழலிற்பணிந்தேத்துவார். (௬)

திருத்தனேசரணஞ்சரணம்மறைச்சென்னிமே,
னிருத்தனேசரணஞ்சரணந்நிறைவேதநூ
லருத்தனேசரணஞ்சரணந்திருவாலவா
யொருத்தனேசரணஞ்சரணங்களுனக்குநாம். (௭)

---

(௭) திருத்தன் - விசுத்ததேகமுடையவன்.

பாயுமாலவிடைமேல்வருமோய்பல்லுயிர்க்கெலாந்
தாயுந்தந்தையுமாகுநின்றண்ணளிதாயனைக்
கேயுமாதவன்போனலநீயவியற்றினாய்
காயுமின்பழமாகுமன்பழமாக்கருதாதலால். (அ)

அத்தகற்றசெருக்கினாலிவழிக்கீரனின்
வித்தகக்கவியைப்பழுதென்றவிதண்டையான்
மத்தகக்கண்விழித்துவெருப்பின்மலர்ந்தபொன்
முத்தகக்கமலத்திடைவீழுமுடிக்கிறாய். (கூ)

இருணிறைந்தமிடற்றடிகேளினியிப்பிழை
கருணைசெய்துபொறுத்தருளென்றுகபிலனும்
பரணனும்முதலாகியபாவலர்யாவருஞ்
சரணமென்றுவிழுந்திரந்தாரடிசாரவே. (ய)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அக்கீரவேலையாலமயின்றவெங்கருணைவள்ள
லிக்கீரமழலைத்தீஞ்சொலிறைவியோடெழுந்துபோந்து
நக்கீரன்கிடந்தசெம்பொனளினப்பூந்தடத்துஞாங்கர்ப
புக்கீரமதுரத்தீஞ்சொற்புலவர்தங்குழாத்துணின்றான். (கக)

அனற்கணானோக்கினான்பின்னருட்கணானோக்கவாழ்ந்த
புனற்கணேகிடந்தகீரன்பொறிபுலன்கரணமெல்லாங்
கனற்கணார்தமவேயாகக்கருணைமாகடலிலாழ்ந்து
வினைக்கணேயெடுத்தயாக்கைவேறிலன்புருவமானான். (கஉ)

போதையாருலகமீன்றபுனிதையார்பரஞானப்பூங்
கோதையாற்குழற்குத்தீங்குகூறியகொடியநாவின
தீதையார்பொறுப்பரோயோவவரனறிந்திருக்காளத்திக்
காதையார்குழையினானைக்காளத்திகைலையென்றான். (கங)

எடுத்தசொன்மாறிமாறியிசையமைந்திசைவெண்பாவாற்
றொடுத்தவந்தாதிசாத்தித்துயிலைச்செயிமடுத்தோர்வக்

(கூ) விதண்டை - பிறர்கூறுங் கூற்றைக்கூற்றை மறுத்துத் தன்னுட்கோளை நாட்டல்.

(கக) கீரம்-பால், க்ஷீரமென்பதின்றிரிபு. இக்கு-கரும்பு. நக்கீரன=உயர்ந்தசொல்லையுடையவன். (கங) போதம்-ஞானம்.

(கச) எடுத்தசொன்மாறி மாறினென்றது- ஒருபாசுரத்தில் கைலையையும், மற்றொருபாசுரத்தில்காளத்தியையும், சிறப்பித்துப்பாடியதை

தடுத்தவன்கையைப்பற்றியகன்கரையேற்றினார்தாள்
கொடுத்தெழுபிறவிவேலைக்கொடுங்கரையேற்றவல்லார். (௧௪)

கைதந்துகரையேறிட்டகருணையங்கடலைத்தாழ்ந்து
மைதந்தகயற்கணாளோவந்தித்தாத்தீங்குநன்கு
செய்தார்த்தோர்க்கிகலுமனபுஞ்செய்தமைபொருளாச்செய்யுட்
பெய்தந்துபாடுகினான்பிரானருணாடுகின்றான். (௧௫)

அறனிலானிழைத்தவேள்வியழித்தபேராண்மைபோற்றி
மறனிலாத்தண்டிக்கீந்தமாண்பெருங்கருணைபோற்றி
கறுவிவீழ்கூற்றைக்காயந்தகனைகழற்கமலம்போற்றி
சிறுவனுக்கழியாவாழ்நாளளித்தருள்செயநிபோற்றி. (௧௬)

சலந்தரனுடலங்கீண்டசக்கரப்படையாய்போற்றி
வலந்தருமதனைமாயோன்வழிபடக்கொடுத்தாய்போற்றி
யலர்ந்தசெங்கமலப்புத்தேணடுச்சிரமரிந்தாய்போற்றி
சிலந்தியைமருடஞ்சூட்டாவரசருள்செல்வம்போற்றி. (௧௭)

திரிபுரம்பொரியநக்கசேவகம்போற்றிமூவர்க்
கருளியதலைமைபோற்றியானங்கனையாகந்தீய
வெரியிடுநயனம்போற்றியிரதிவெந்திரப்பமீளக்
கரியவன்மகனுக்காவியுதவியகருணைபோற்றி. (௧௮)

நகைத்திடவந்தவந்நகுசிரந்திருகிவாங்கிச
சிகைத்திருமுடிமேல்வைத்ததிண்டிறல்போற்றிசேயி
லகத்தவிசுடரைத்தாண்டுமெலிதகரசாளமூன்று
சகத்தையுமளித்தசீரவர்தம்பிரானசரணம்போற்றி. (௧௯)

பொருப்பகழ்ந்தெடுத்தோனசென்னிபுயமிறமிதித்தாய்போற்றி
யிருக்கிசைத்தவனேபாடவிரங்கிவாள்கொடுத்தாய்போற்றி
தருக்கொடுமிருவர்தேடத்தழற்பிழம்பானாய்போற்றி
செருக்குவிட்டவரேபூசைசெய்யநேர்நின்றாய்போற்றி. (௨௦)

பருங்கைமால்யானையேனம்பாய்புலியரிமான்மீன
மிருங்குறள்யாமைகொண்டவிகல்வலிகடந்தாய்போற்றி

---

(௧௫) பெய்தந்து - அமைத்து. (௧௬) அறனிலான் - தக்கன். சண்டி - சண்டேசுரநாயனார். (௧௮) மூவரென்றது-வித்துன்மாலி, தாருகாக்கன், கமலாக்கனென்னுந் திரிபுராதிகளை. கரியவன் - திருமால். (௧௯) நகுசிரம் - வெண்டலை.

